ஓம் தத் சத்

பரப் பிரஹ்மணே நம:

# கீதா சாரத் தாலாட்டு.

## நக்ஷத்திர விளக்க (மீன் ஒளி) உரை.

அகம் பிரஹ்மாஸ்மி.

பிரஹ்மம்.



ப்ரக்ஞானம் ப்ரஹ்மம்.



தத த்வ மசி,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.
வேதாந்த மடம், திருப் பூ வணம்.

இரண் டாம் பதிப்பு. 1967.

விலை நயா பைசா 50

| பக. | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 5 | 4 | பிரயாசம | பிரயாசம் |
| | 8 | ஞரி | ஞாரி |
| 6 | 16 | மோககம | மோக்கம் |
| 10 | 14 | ஞாநததி | ஞாநத்தி |
| | | அனைத்தும | அனைத்தும் |
| 13 | 9 | ஆயச் | ஆய்ச் |
| 14 | 5 | நாசம | நாசம் |
| 16 | 16 | பீஜ் | பீஜ |
| 21 | 5 | சநநதியில் | சந்நிதியில் |
| 22 | 10 | வினைகன | வினைகள் |
| 25 | 9 | அபேதம | அபேதம் |
| 26 | 9 | டுயய | டுய்ய |
| 29 | 6 | சிபப்பு | சிவப்பு |
| | 14 | மலீநம் | மலிநம் |
| 30 | 5 | இருககின் | இருக்கின் |
| 31 | 8 | சரீரரதி | சரீராதி |
| 33 | 17 | ஆயின | ஆயின் |
| 35 | 14 | வேதாந்த | வேதாந்தத் |
| 40 | 9 | கேடுதல் | தேடுதல் |
| 42 | 10 | ஆநமாவே | ஆந்மாவே |
| 43 | 3 | இருள | இருள் |
| | | அநதகாரம் | அந்தகாரம் |
| 44 | 12 | விளககினை | விளக்கினை |
| 55 | 4 | ரன்மை | பான்மை |
| 56 | 9 | ஆத்மத் | ஆத்மா |
| 64 | 3 | கனல் | கானல் |





கிருஷ்ணன் — யசோதா

काशिकानन्द ज्ञानाचार्य स्वामिकल् । तिरुप्पूवणम् मठम् ।




Kasikananda Gnanacharya Swamigal,
Tiruppuvanam Matam.



ஓம் தத் சத்
பரப் பிரஹ்மணே நம:

திரு வாமாத் தூர்

ஸ்ரீ திரு வேங்கட நாதர் அவர்கள் இயற்றிய

# கீதா சாரத் தாலாட்டு.

நக்ஷத்திர விளக்க (மீன் ஒளி) உரையுடன்



உரை ஆசிரியர்

திருப் பூ வணம், வேதாந்த மட ஸ்தாபகர்,
சத சாஸ்திர கர்த்தா,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் அவர்கள்

மாணுக்கர், ஸ்ரீலஸ்ரீ

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரவில்
பதிப்பிக்கப்பட்டது

1967.



உ

சிவ மயம்.

# முக உரை.

இந் சல வுலகத்தில் எழு விதமான பிறவிகளில் மாநுடப் பிறவி மேன்மையுடையதாம். அவ்வாறு, மாநுடராய்ப் பிறந்த ஆண் பெண் இருபாலாரும், தமக்கு உறுதிப் பயனாகிய மோக்ஷத்தை அடைவதே பிறப்பின் பயனாம். அந்த மோக்ஷத்திற்குக, கர்மம் பக்தி ஞானம் என்று மூன்று சாதனங்கள் நூற்களில் கூறப்படுகின்றன. அதனை விளக்க, பகவான் பாரதத்தில் (700) எழு நூறு சுலோகமாகப் பகவற்கீதை என்னும் பெயரால், அர்ஜுநனை நிமித்தமாகக் கொண்டு உலகினர் யாவருக்கும் பயன்படும்படியாக, ஒரு நூல் அமைத்து வைத்திருக்கின்றனர். அந்தப் பகவற் கீதை எழு நூறு சுலோகங்களும், உலகத்தில் உள்ள சகல பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு, சகல தேயத்தவரும், அதன் பொருளை உணர்ந்து, ஆத்ம ஞானிகள் ஆகி வருகின்றனர் என்பது உலகப் பிரசித்தமான விஷயம்.

அந்தப் பகவற் கீதை எழு நூறு சுலோகங்
களையும், தமிழில் வசந வடிவ மாகவும், செய்யுள்
வடிவ மாகவும், பலர் மொழி பெயர்த்திருக்
கின்றனர் அவற்றுள், சேம நகர் பட்டரால்
(545 செய்யுள் ரூப மாக மொழி பெயர்த்த
பரமார்த்த தரிசநம் என்னும் பகவற் கீதையும்
ஒன்றும் இதனை, மூல மாகக் கொண்டு, திரு
வா மாத் தூர் என்னும் ஊரில், எழுந்தருளி
யிருந்த, திரு வேங்கட நாதர் என்னும் வித்வத்
சிரேஷ்டர், கர்மம் பக்திகளை விட்டுச் சார
மான ஞாந அர்த்தத்தினை மாத்திரம், மந்த மதி
யினரும் உணர்ந்து, மோக்ஷம் அடைய வேண்
டும் என்னும் அவா மேலீட்டால், பால கிருஷ்
ணனைத் தொட்டிலில் இட்டுத் தா லாட்டுவது
போன்று, தாலாட்டுப் பிரபந்த மாக 104 செய்
யுட்களில் இயற்றிப், பகவற் கீதா சாரத்
தாலாட்டு என்னும் பெயரை, முதற் குறை
யாகக் கீதா சாரத் தாலாட்டு எனப் பெயர் ஈந்து
தம் மகவு இடம் கொடுத்தனர்.

இக் கீதா சாரத் தாலாட்டு என்னும் நூல்
ஞாந அர்த்தங்கள் பலவற்றையும் ஒருங்கே



திரட்டி, அர்ஜுநன் சங்கையும், கிருஷ்ண பர
மாத்மா சமா தாநமும், கூறும் வாயி லாக ஆரம்
பிக்கப்படுகின்றது, ஆத்ம அநாத்ம பதார்த்தங்
களின் இயல்புகளை அதிகப் பிரயாசம இன்றி
அறியும்படி செய்வது மதாலசா எனனும் பெண்
மணி தன் பிள்ளைகளைத் தொட்டிலிலிட்ட ஞாநி
கள் ஆக்கியது. போன்று, பாலப் பருவத்தி
லேயே, மாதாவின் உபதேசத்தால் ஞாநி ஆக்க
வல்லது. புத்திக் கூர்மை யில்லாத பெண்களும்,
ஆண்களும், ஆத்ம தத்துவத்தினை அறியும்படி
முன் னிலைப்படுத்திக் கூறுவது.

இவ் விதப் பெருமை வாய்ந்த, ‘‘கீதா சாரத்
தாலாட்டு’’ என்னும் நூலுக்கு‘‘லகு சந்திரிகை’’
என, நாம் ஓர் உரை யியற்றி யிருக்கின்றோம்
இது இன்னும் வேறு ஓர் நக்ஷத்திர விளக்க
(மீன் ஒளி) உரை உடன் வெளி வரின், ஆண்
பெண் பாலார் பலருக்கும் உபயோகம் ஆகும்
எனக் கருதி, எனது நண்பர் பலர் கேட்டுக்
கொண்டபடி, இந்த உரையை இயற்றி முற்று
வித்தனம்.

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,

சர்வதாரி ௵ மாசி மாதம். திருப் பூ வணம்.

உ

சிவ மயம்.

## நக்ஷத்திர விளக்க உரை.

### பாயிரம்.

அருமையாம் ஆமாத் தூர்தனில் விளங்கி
அகிலநூற் பொருளைநன் குணர்ந்து,
பெருமையார் திருவேங் கடநாதர் என்னும்
பெயரினை மாதவ முனிவன்,
அருளுருக் கொண்ட கண்ணன்வாக் கியத்தை
அனைவரும் எளிதினில் உணரத்,
தருமையாம் கீதா சாரத்தா லாட்டாகத்
தந்தனன் தரணியோர் தமக்கு.
திருக்களர் வீர சேகர இறைவன்
திருஅடி களைத்தினம் பணிந்து,
கருக்கிளர் துயரை அறுக்குமா ணவர்கள்
கவின்பெரு மோக்கம தடைய,
இருக்கும்கீ தாசா ரத்தாலாட் டினுக்கு
இனையில்நட் சத்திர விளக்க,
அருத்தமாம் உரையை ஆக்கினன் காசி
காநாந்த அடிகளாம் அறவோன்.

உ

ஓம் தத் சத்.

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகாய நம:

# கீதா சாரத் தாலாட்டும், நக்ஷத்திர விளக்க (மீன் ஒளி) உரையும்.

மாதையர்கோன் வேதநவில் வாய்வேங் கட
நாதன், காதைஉறப் பார்த்தனுக்குக் கண்ணன்
அருள்—கீதைக், கருத்துயர்தா லாட்டாகக் கட்டு
வைத்தான் யாரும், கருத்துயர்தீர்ந் தேய்தக்க தீ. 1

(ந-உரை) மாதையர்-(திரு வா)மாத் தூரில்
உள்ளார்க்கு, கோன்-தலைவராயும், வேதம்-வே
தங்களை, நவில் - அத்திபநம் செய்கின்ற,
வாய்-வாக்கினை (உடையவராயும், உள்ள) வேங்
கட நாதன்-ஸ்ரீ வேங்கட நாதன் (என்னும் நாமம்
உடையவன்), காதை-(யுத்தத்தில், எதிர்த்தோ
ரைக்) கொல்லுதலை, உற-பொருந்தும்படியாக.
(அதாவது, கொல்லும்படியாக), பார்த்தனுக்கு-
அர்ஜுநனுக்கு, கண்ணன்-பகவான், அருள்-உப
தேசித்த, கீதை-(பகவற்) கீதையின், கருத்து-

(ஞாநார்த்த ரூப) தாத்பரியத்தினை, யாரும்-(மோக்ஷ இச்சை உடைய) எவரும், கரு-பிறவி, துயர்-துன்பம், தீர்ந்து - நீங்கி, கதி - மோக்ஷத்தினை, எய்த-அடைய, உயர்-மேன்மை (உடைய), தாலாட்டு ஆக - தாலாட்டுப் பிரபந்தம் ஆக, கட்டு உரைத்தான்-கூறினன். (எ—று) 1

ஐவகைப் பொருளு நான்கு காணமும் குணங்கள் மூன்றும், செய்வினை இரண்டும் ஒன்றி யாவரும் திகைப்ப நின்ற, பொய்இருள் அகல ஞானப் பொருள்கதிர் விரித்த புத்தேள், கைவளர் ஆழிச் செம்கண் கண்ணனைக் கருத்துள் வைப்பாம். 2

(ந-ரை) ஐ-ஐந்து, வகை-வித மான, பொருளும்-(பிருதிவி ஆதி பஞ்ச) பூதங்களும், (பிராணாதி ஐந்து) வாயுக்களும், (வாக்காதி ஐந்து) கர்மேந்திரியங்களும், (சுரோத்திராதி.) ஐந்து ஞானேந்திரியங்களும், கரணம் நான்கு உம்- அந்தக்கரண சதுஷ்டயமும், குணங்கள் மூன்றும், (சத்துவாதி.) குணத் திரயங்களும், செய்-மநவாக் காயங்களால்) செய்யப்படுகின்ற, வினை-(புண்ணிய பாவம் ஆகிய) கர்மங்கள், இரண்டும்-



இரண்டும், ஒன்றி-(ஆக) பொருந்தி, யாவரும்-(ஞானியும், ஈசுவரனும், தவிர மற்றைய ஜீவர்கள்). யாவரும், திகைப்ப-மயக்கும்படி யாக, நின்ற-(ஸ்வாசிரய ஸ்வ விஷய மாக) இருக்கின்ற, பொய்-அநிர்வசநீய, இருள்-(அவித்தியா) அந்தகார மானது, அகல-நீங்குதற்கு, ஞாந-(பிரஹ்ம) வித்தியா (ஸ்வரூபம் என்னும்), பொருள்-(கீதா சாஸ்திர) அர்த்தங்க ளாகிய, கதிர்-கிரணங்களை, விரித்த-(சகல உலகத்தி னிடத்தும்) பரப்பிய, புத்தேள்-சூரியன் ஆகிய, கை-கரத்தில், வளர்-பிரகாசிக்கின்ற, ஆழி-(சங்கத்தையும்) சக்கரத்தினையும், செம் - சிவந்த, கண்-நேத்திரங்களையும் (உடைய), கண்ணனை-ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை. கருத்துள்-மநத்துள், வைப்பாம்-வைத்துத் தியாநிப்பாம். (எ—று) 2

சீர்ஆரும் பரமார்த்த தெரிசநத்தை அருள்செய்யப், பேர்ஆரும் தேசிகன்ஆய்ப் பெருமானே வந்தவரோ. 1

(ந-ரை.) பெருமானே-பெருமையில் சிறந்தவரே, சீர்-(மோக்ஷத்தினை அடைவிக்கும்.) சிறப்

பினை, ஆரும்-பொருந்தியிருக்கின்ற, பரமார்த்த தெரிசனத்தை-பரம பொருளின் சாக்ஷாத்காரத்தை, அருள்-(அர்ஜுனனுக்கு) அநுக்கிரகம், செய்ய-செய்தற்கு, பேர் ஆரும்-பெருமை பொருந்திய, தேசிகன் ஆய்-குரு மூர்த்தம் ஆக, வந்தவரோ-எழுந்தருளி வந்தவரோ, (நீர்), எ—று) 1

திருத்தேரில் சாரதியாய்ச் சேர்ந்திருந்தும் கீதை
யினால், அருச்சுநற்கு மெய்ஞ்ஞாநம் அனைத்தும்
உரை செய்தவரோ. 2

(ந-ரை) திரு-சிறந்த (அழகிய), தேரில்-ரதத்தில், சாரதி ஆய்-பாகன் ஆய், சேர்ந் திருந்தும்-பொருந்தி இருந்தும், கீதையினால்-(தமது) வாக்கால், அருச்சுநற்கு-பார்த்தனுக்கு, மெய் ஞாநம்-உண்மை ஞாநத்தினையும், அனைத்துப்-(அதற்கு சாதந மாக உள்ள) யாவற்றையும், உரை-உபதேசம், செய்தவரோ-செய்தருளிய பகவானே-(நீர்) (எ—று.) 2

செம்சமரில் பந்துசநச் சேதம்வரும் என்றிரங்கி,
அஞ்சினவன் பயம்தீர்த்தே அமர்செய்யச் சொன்ன
வரோ. 3



(ந-ரை.) செம்-தர்ம நீதியான, சமரில்-யுத்தத்தில், பந்து சநம் - உறவினர் ஆகிய மனிதர்களு, சேதம் - நாசம, வரும - வந்து எய்தும், என்று-எனக் கருதி, இரங்கி-பரிதபித்து, அஞ்சினவன்-பயந்த பார்த்தனது, பயம-அச்சத்தினை, தீர்த்து-(கர்மம் பக்தி ஞாநம் என்பவற்றால்) நீக்கி, அமர்-யுத்தத்தினை, செய்ய-செய்யும்படி, சொன்னவரோ-கூறி யருளிய பகவானே (நீர்), (எ-று) 3

சுற்றம்அறில் சோகம்எனச் சொல்லினைசற்
றறிந்தவன்போல், கற்றுணர்ந்த பேர்அதனால்
கலங்கார்காண் என்றவரோ. 4

(ந-ரை.) சுற்றம்-சுற்றத்தவர்கள், அறில்-நாசம் உறில், சோகப்-துக்கம், என்-என்று, அறிந்தவன் போல்-(சில நூல் பொருளை) உணர்ந்தவன் போன்று, சற்று-சிறிது, சொல்லினை-கூறினாய், அதனால்-(சுற்றத்தவர்கள் நாசம்) அடைவதனால், கற்று, (குரு முன் பாகச் சாஸ்திரங்களை (படித்து தெளிந்து), உணர்ந்த பேர்-ஆத்ம அநுபவ ஞாநிகள், கலங்கார் - (மநச்) சலநம் உறார், என்ற

வரோ-என்று அருளிய பகவானே (நீர்), (எ-று.)
காண் முன்னிலை அசை. 4

கலங்காரோ இறப்புவரில் கற்றுணர்ந்த பேரோ
னும், மலங்காமல் நானிருக்கும் வகைஉரையும்
எனவினவ. 5

(ந-ரை) கற்று-(குரு முகமாக அத்யாத்ம வித்தைகளை) ஆராய்ந்து, உணர்ந்த-(பிரஹ்மத்தைச்) சாக்ஷாத்கரித்த, பேரேனும்-ஞானிகளாயினும், இறப்பு-மரணம், வரில்-வந்தால், கலங்காரோ-மயங்கமாட்டார்களா, (அப்படியாயின்), நான்-அடியேன், மலங்காமல்-கலங்காமல், இருக்கும்-இருக்கும்படியான, வகை-உபாயத்தினை, உரையும் - உபதேசம் செய்யும், என-என்று, வினவ-(அர்ஜுனன்) கேட்க. (எ—று). 5

நீயுநா னும்புவிமேல் நிருபர்களும் மெய்உணர்
வால், ஆயுங்கால் பிறந்திறப்ப தார்க்குமிலை
என்றவரோ. 6

(ந-ரை) மெய் உணர்வால்-உண்மை ஞானத்தினால், ஆயும் கால் - விசாரிக்குமிடத்து. நீயும்-



(அர்ஜுனனாகிய) தானும், நானும்-(பரமாத்மாவாகிய) யானும், புவி மேல்-இப் பூ உலகில் (உள்ள), நிருபர்களும்- அரசர்களும், ஆர்க்கும் - (மற்றை) எவர்க்கும், பிறந்து-ஜனித்து, இறப்பது மரிப்பது, இலை - இன்று, என்றவரோ-என்று உபதேசித்த பகவானே நீர் (எ-று) 6

ஈங்கேவர்க்கும் பிறந்திறப்ப தில்லைஎன்றீர்
இவ்வுலகில், நீங்குபவம் ஆர்க்கிதனை நிச்சயம்
ஆயச் சொல்லும்என. 7

(ந-ரை) ஈங்கு-இப் புவியில், பிறந்து-ஜனித்து. இறப்பது-மரிப்பது, எவர்க்கும்-எல்லா ஜீவர்கட்கும், இல்லை-இல்லை, என்றீர்-என்று கூறினீர், இவ் உலகில் - இப் புவியில், பவம்-பிறப்பதும், நீங்கு-இறப்பதும், ஆர்க்கு-எவர்க்கு, இதனை-இவ்விஷயத்தினை, நிச்சயம் ஆய்-உண்மை யாய், சொல்லும்-கூறும், என-என்று (அர்ஜுனன் கேட்க)-எ—று) 7

இத்தரையில் பிறந்திறப்ப தேடுத்தவுடற்
கடுத்தபோறி, நித்தியமா கியஆத்மா நின்சோருபம்
என்றவரோ: 8

(ந-ரை.) இத் தரையில் - இப் பூ உலகில், பிறந்து-ஜநித்த, இறப்பது-மரிப்பது, எடுத்த - தாங்கிய, உடற்கு-சரீரத்திற்கு, அடுத்த-கிட்டிய, பொறி-தன்மை யாம், நின்-உன் னுடைய, சொரூபம்-(உண்மை) ஸ்வரூபம், நித்தியம் ஆகிய-நாசம இன்றிய, ஆன்மா-ஆத்மா, என்றவரோ-என்று உபதேசம் செய்த பகவானே (நீர்). (எ-று) 8

அங்கம்உயிர் இந்தியம்நான் அன்றிவே றெனைக் காணேன், இங்குயான் வேறுண்டேல் எனக்கறி யப் புகலும்என.
9

(ந-ரை) நான் - எனது சொரூபம், அங்கம்-(தூல)உடம்பும், உயிர்-பிராணனும், இந்தியம்-இந்திரியங்களும், அன்றி-அல்லாமல், வேறு-அந்நியமாக, எனை-ஆன்மா என்னும் ஒன்றை, காணேன்-(நான்)அறிந்திலேன், இங்கு-இவ் விடத்து யான்-நான் (என்னும் ஆத்ம ஸ்பரூபம்), வேறு-(தூல சூட்சும சரீரங்கட்கு) அந்நியம் ஆக, உண்டேல்-இருக்கு மாயின், எனக்கு-அடியேனுக்கு, அறிய-தெரிய, புகலும் - கூறும், என-என்று விண்ணப்பிக்க. (எ-று)
9



மெய்உயிர்இந் தியங்கள்அல்லால்வேறறியேன் என்றவனைப், பையஅவை யால்அறியப் படானும் நீ என்றவரோ. 10

(ந-ரை.) மெய்-தூல உடம்பும், உயிர்-பிராணனும், இந்தியங்கள்-இந்திரியங்கள், அல்லால்-(நானாக விளங்குகின்றனவே)அன்றி, வேறு-(ஈர் உடம்புக்கும்) அந்நிய மாக, அறியேன்-(என்னை) அறிந்திலேன், என்றவனை-என்று கூறிய பார்த்தனை(ப் பார்த்து). பைய-குழந்தாய், அவையால்-அச் சரீராதிகளால், அறியப்படானும்-உணரப் படாதவனும் அவற்றை அறிபவனும், நீ-நீ ஆவாய், என்றவரோ-என் றருளிச் செய்த பகவானே (நீர்). (எ—று) 10

தேகம்வே றகில்அதைச் சேர்ந்ததிவண் ஏதேனவே, சோகமே விளைகருமத் தொடர்ச்சியினல் என்றவரோ. 11

(ந-ரை) தேகம்-சரீரம், வேறு ஆகில்-அந்நியமாகில், அதை-அந்தத் தேகத்தை, இவண்-இவ்விடத்து, சேர்ந்தது-(ஆத்மா) சம்பத்தித்தது, ஏது-

எப்படி, என-என்று, (பார்த்தன் கேட்க) (அதற்கு பகவான்) சோகமே-துன்பமே, விளை-உண்டாக்குகின்ற, கரும-(செய்த) கருமங்களின், தொடர்ச்சியினால் - சம்பந்தத்தினால், என்றவரோ - என்று கூறிய பகவானே (நீர்). (எ—று). 11

தேகம்எடா முன்கருமச் செயல்வருமா றேதென
வே, ஏகமாம் மரமும்வித்தும் எனும்முறைபோல்
என்றவரோ, 12

(ந-ரை) தேகம் - சரீரம், எடா - எடுத்தற்கு, முன் - பூர்வம், கருமச் செயல் - கருமங்களாகிய தொழில், வரும் ஆறு-வந்த வழி, ஏது-யாது, என-என்று (பார்த்தன்), வினவ-கேட்க, (பகவான் கூறுகின்றார்) வித்தும்-பீஜமும், மரமும்-(வித்தை யுண்டாக்கிய) விருக்ஷமும், எனும்-என்று சொல்லுகிற, ஏக மாம் - ஒன்றாகின்ற, முறை-கிரமம், (பீஜ அங்குர நியாயம்), போல்-போன்று, (அதாவது, உடல் ஆதியால் கருமமும், கருமத்தால் சரீராதிகளும் அநாதி யாகவே மாறி மாறி வருவது ஆம்), என்றவரோ-என் றருளிய பகவானே (நீர்). (எ—று) 12



இதனை, பீஜ (வித்து) அங்குர (மரம் முளை) நியாயம் (திருஷ்டாந்தம்) என்பர். 12

காயமும்தா னும்பிறிதேல் கன்மம்எவர் செய்த
தேனத். தீயஉடற் கலதுகன்மச் செயல்தனக்கே
தென்றவரோ. 13

(ந-ரை) காயமும்-சரீரமும், தானும்-ஆன்மாவும், பிறிதேல்-வெவ் வேறாயின், கன்மம்-கருமம், எவர்-யாவர், செய்தது-செய்தனர், என-என்று (பார்க்குநன்) வினவ, (பகவான் கூறல்) கன்மச் செயல் - கருமத்தால் உண்டாகும் (நல்வினை தீ வினைகள்), தீய - குற்றம் பொருந்திய, உடற்கு-தேகத்திற்கே, அலது-அன்றி, தனக்கு-ஆன்மாவுக்கு, ஏது - எப்படி ஆம், என்றவரோ-என்று கூறிய பரமாத்மாவோ (நீர்).(எ-று) 13

படர்கருமம் உடல்செய்யில் பலம்உறுவ தார்க்கி
கேன்வே, அடர்பலமும் உடற்கேயாம் அறிவார்க்
கே தென்றவரோ. 14

(ந-ரை) படர் - விரிந்த, கருமம் - கிரியைகள், உடல்-தேகம், செய்யில் - இயற்றுமாகில், பலம்-

பிரயோசநம், உறுவது - அடைவது, ஆர்க்கு - எவர்க்கு, என - என்று (பார்த்தன்) வினவ - (அதற்கு பகவான்) அடர் - நெருங்கிய, பலமும் - பயன்களும், உடற்கே யாம் - சரீரத்திற்கே யாகும். அறிவார்க்கு - அறிவு ரூப ஆத்மாவிற்கு, ஏது - எப்படி (இல்லை), என்றவரோ - என்று கூறிய பகவானே. (நீர்). (எ-று) 14

வெய்யவினை உடற்கென்றால் மெய்இங்கே விழ ஆந்மா, ஐயம்அற நரக்சோர்க்கம் அநுபவிப்ப தேதேனவே. 15

(ந-ரை) வெய்ய - கொடிய, வினை - கரும பலன்கள், உடற்கு - தேகத்திற்கு, என்றால் - என்று கூறின், மெய் - (தூல) சரீரம், இங்கே - இவ் வுலகிலே, விழ - விழுந்து இருக்க, ஆந்மா - அந்த ஆத்மா, ஐயம் - சம்சயம், அற - இன்றி, நரக - நரக (துக்கத்தையும்), சொர்க்க - ஸ்வர்க்க (சுகத்தையும்), அநுபவிப்பது - நுகர்வது, ஏது - எப்படி (எக் காரணத்தினால்) என - என்று விஜயன் வினவ. (எ-று) ஏ - அசை. 15

அநுபவமே இலை அதுவீண் ஆரோபி தம்நிகழ்த்தில், தநுகாணச் செயல்தனதாச் சார்வதுபோல் என்றவரோ. 16



(ந-ரை) அது - ஆந்மாவுக்கு (நரக சொர்க்க துக்க சுக அநுபவம்) நிகழ்த்தில் - புகலு மிடத்து, அநுபவமே இலை - (யதார்த்த) அநுபவமே இன்று, (பின்னர்) தநு - (ஸ்தூல) சரீரத்தினதும், காண - அந்தக் கரணாதிகளினதும் (ஆய), செயல் - தொழில்கள், தனது ஆக - தன்னுடையதாக, சார்வது போல் - பொருந்தி தோன்றுவது போல, வீண் - வியர்த்த மான, ஆரோபிதம் - கற்பனைத் தோற்றம் என்றவரோ - என்று கூறிய பகவானே. (நீர்) (எ-று) 16

மற்றுடலின் செய்கைதன்மேல் வருமயக்கம் ஏதேனவே, முற்றுணர்வோன் றில்லாத மோகம் என்று சோன்னவரோ. 17

(ந-ரை மற்று - (தனக்கு) வேறான, உடலின் - சரீரங்களின், செய்கை - தொழில்கள், தன் மேல் - (ஆத்மா வாகிய) தன் மீது, வரும் - வந்து தோற்றுகின்ற, மயக்கம் - பிராந்தி, ஏது - எப்படி, என - என்று. அர்ஜுநன் வினவ, (அதற்கு பகவான்) முற்று - பூரண மான, உணர்வு - ஞாநத்தை, ஒன்றில்லாத - அடைத லின்றிய, மோகம் - மயக்கத்தி

ஞல். என்று-என, சொன்னவரோ-உபதேசித்த பகவானே. (நீர்). (எ—று). 17

அறிவுதே கம்தனக்கோ ஆந்மாவிற் கோஎன்
வே, பிறிவுசெயில் அசித்துடலம் பிரமம்அறி
வென்றவரோ. 18

(ந-ரை.) அறிவு-(அறிவு ரூப) ஞான மானது, தேகம் தனக்கோ-சரீரம்தனக்கா, ஆந்மாவிற்கோ, (அந்தர்) ஆத்மாவிற்கா, என-என்று அர்ஜுனன் வினவ, (சமாதாநம் கூறல்) பிறிவு செயில் - (உடலையும், ஆத்மாவையும்) பிரித்துப் பார்க்கில், உடலம்-சரீரம், அசித்து-ஜட மாம், பிரமம்-(ஆந் மா வாகிய) பிரஹ்மம், அறிவு-ஞாந ஸ்வரூப மாம், என்றவரோ- என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று) தன் - அசை. 18

தேகம்அசித் தாகில்இந்தச் செயல்வருவ தே
தெனவே, ஏகபரம் சோதியின்முன் இருக்கை
யிஞல் என்றவரோ. 19

(ந-ரை.) தேகம்-சரீரம், அசித்து ஆகில்-ஜடம் ஆயின், இந்தச் செயல்- (போதல் வருதல் ஆதி)



இத் தொழில்கள், வருவது-வந்து பொருந்துதல் எதி - எப்படி, என - என்று, (விபர்சு வினவ,) (அதற்கு சமாதாநம்) ஏக-ஒன்ருயும் (வியாபக மாயு முள்ள), பரம் சோதியின்-பிரஹ்மப் பிரகாசத் தின், முன்-சந்நிதியில், இருக்கையிஞல்-(தேகம்) இருக்கின்றமையிஞல், என்றவரோ-(ஆத்ம சந் நிதியில் சரீராதி தொழில்கள் கூடும்) என்றருளிச் செய்த பகவானே (நீர்). (எ—று) 19

இருக்கினும்அசேதநந்துக் கிச்செயல்உண் டோ
எனவே, உருக்குபடாக் காந்தமுன்னில் ஊசிநிகர்
என்றவரோ. 20

(ந-ரை.) இருக்கினும் - (சரீரம் ஆத்மாவை அணுகி) இருப்பினும், அசேதநத்திற்கு - (கற் போன்ற) ஜட உடலுக்கு, இச் செயல் -(ஈதல் இரத்தல் ஆதி) இக்கிரிகைகள், உண்டோ-உளவா மோ?, என-என்று (காண்டீபன் கேட்க,) (திருஷ் டாந்த வாயி லாக உத்தரம் கூறல்) உருக்குபடா (அக்நியில்) காய்ச்சுதல் இல்லாத, காந்த முன் னில்-காந்த சந்நிதியில், ஊசி நிகர்-(ஜட மாகிய) ஊசி (ஒட்டும் தன்மையாதல்) போல, (ஆத்ம)

வை அணுகிய உடலும், கிரியைகள் செய்யும்தன்மை யாதல் கூடும்). என்றவரோ-என அருளிச்செய்த பகவானே (நீர்). (எ—று)

இதனை, சூசி (ஊசி) காந்த (காந்தம்) நியாயம் (திருஷ்டாந்தம்) என்பர். 20

சொன்னசெயல் உடற்கானல் சுகதுக்கம் இயார்க்கெனவே, அன்னசுக துக்கமும்தான் அவ்வுடற்கே என்றவரோ. 21

(ந-ரை-) சொன்ன-(முன்) சொல்லிய,செயல்-(நன்மை தீமை தருபவை யாகிய) வினைகள், உடற்கு ஆனல்-சீரத்திற் கானல், சுகம்-(வரும் பய னான) இன்பமும், துக்கம் - துன்பமும், யார்க்கு-யாவர்க்கு, என-என்றுபார்த்தன் கேட்க (பார்த்த சாரதி கூறல்), அன்ன-அவ் வித மாய. சுகம் - இன்பமும், துக்கமும்-துன்பமும்' அவ் உடற்கே-அத் தேகத்திற்கே யாம், என்றவரோ - என உபதேசித்த பரமாத்மாவோ (நீர்). (எ-று) தான் அசை. 21



சேதநமாம் ஆந்மாவைச் சேராத துக்கசுகம், ஓதுசடம் ஆம்உடலை உற்றிடுமோ சொல்லும் என. 22

(ந-ரை) சேதநம் ஆம்- அறிவு வடிவாகிய,ஆந்மாவை-ஆத்மாவினை, சேராத-சம்பந்தியாத, துக்கம்-துன்பமும், சுகம் - இன்பமும், ஓது-(அநுபவித்தற் கிட மாகச்)சொல்லப்பட்ட, சடம் ஆம்-அறி வின்றிய தாகிய, உடலை-தேகத்தை, உற்றிடுமோ - சம்பந்தித்திடுமோ?, சொல்லும்-(அடியேனுக்கு)க் கூறி யருளும், என-என்று அர்ஜுநன் வினவ, (எ-று), 22

பூதமைந்தோ டைந்துயிர்கள் புலன்கள்பத்து மநமுதல்நான், ஈதிருமெய் இதில்மநத்துக் கின்ப துன்பம் என்றவரோ, 23

(ந-ரை) பூதம் ஐந்தோடு-(ஸ்தூல) பஞ்ச பூத அம்ச மாகிய ஸ்தூல சரீரத்தோடு, ஐந்து உயிர்கள்-பஞ்ச வாயுக்களும், புலன்கள்-ஞான இந்திரிய கர்ம இந்திரியாதிகள், பத்தும் - பத்தும், மநம் முதல் நான்கும்-மநம் புத்தி சித்தம் அகங்காரம் நான்கும் ஆக, ஈது-இந்த (இரு பத்து நான்கு)

தத்துவங்களும், இரு மெய்-(ஸ்தூலம் சூக்ஷமம் என்னும்) இரண்டு சரீரங்கள், இதில்-இவ் இரு உடலுக்குள், மநத்துக்கு-மநதிற்கு, இன்ப துன்பம்-சுக துக்கம், என்றவரோ - என்று அருளிய பகவானே (நீர்) (எ-று) 23

இந்தஇரு வகைத்தநுவிற் கேதுவே தேன
வினவ், மூந்தியகா ரணமதனுல் மூன்றுதநு என்ற
வரோ. 24

(ந-ரை) இரு வகை-(ஸ்தூல சூக்ஷமம் என) இரண்டு வித,இந்த தநுவிற்கு-இச் சரீரங்களுக்கு, எது-காரணம், எது-யாது, என-என்று, வினவ-(அர்ஜுநன்) கேட்க, (அநந்த பகவான்)மூந்திய-முற்பட்ட, காரணம்-(அஞ்ஞாநம்) முதல் சரீரமாம், அதனுல்-அக் காரண சரீரத்தோடு, (மேற்கூறிய ஸ்தூல சூக்ஷம சரீரமும் சேர்ந்தது), மூன்று தநு-முச் சரீர மாம், என்றவரோ-என்றருளிய பகவானே (நீர்). (எ-று) 24
இச்செய்யுள், சூசிக் கடாஹ நியாயமுடையதாம்.

மநம்அறியும் துக்கசுக் வரவென்றீர் அம்ம
நமும், வினவில்அசே தநம்அலவோ விரித்
தேனக்கீது விளம்புமென. 25



(ந-ரை) துக்க சுக-துன்ப இன்பங்களின், வரவு-அடைவு, மநம்-மநது, அறியும்-உணரும், என்றீர்-என்று கூறினீர், அம் மநமும்-அந்த மநமும், வினவில்-விசாரிக்கும் போது, அசேதநம் - ஜடம், அலவோ-அல்லவா, விரித்து-(ஜட மாகிய மநம் சுகா சுக அறிவைப் பெறுதல் எப்படி என்பதை) விஸ்தரித்து, எனக்கு-அடியேனுக்கு, விளம்பும்-கூறும், என-என்று அர்ஜுநன் வினவ. (எ-று) 25

அம்மநத்தில் ஆந்மா அபேதம்போல் தோன்று
தலால்,விம்முதுக்க சுகத்தைமநம் மேவும்என்று
சொன்னவரோ. 26

(ந-ரை) அம் மநத்தில்-(முன் கூறிய) அந்த மநத்தின்கண், ஆந்மா -(அறிவு ரூப)ஆத்மா, அபேதம்-ஒன்றுபட்டது, போல்-போல, தோன்றுதலால் - விளங்குதலால், விம்மு - மிகுந்த, துக்க சுகத்தை-துன்பஇன்பங்களை, மநம்-மநது, மேவும்-பொருந்தும், என்று-என. சொன்னவரோ-உபதேசித்த பகவானே (நீர்). (எ-று) 26

அந்தமநோ வந்திலங்தும் துக்கசுகம் அதனிடத்து நில்லாமல்,
ஆந்மாவைமருவியதேன் சொல்லும் என. 27

(ந-ரை.) அந்த-(முன் புகன்ற) அம், மநோ-மநத்தினது, துக்க சுகம் - துன்ப இன்பங்கள், அதனிடத்து-அந்த மநத்தினிடத்தே, நில்லாமல்-இராமல், வந்து-அணுகி, இலங்கும்-(ஒன்றாக) விளங்கும், ஆந்மாவை-ஆத்மாவினை, மருவியது-தழுவியது, என் - எப்படி, சொல்லும் - கூறும், என-என்று (அர்ஜுநன் வினவ.) (எ-று) 27

வெய்யகனலின்சூடு மேல்வைத்த சட்டியினூ.
டுய்யபுனல் ஊடுவந்தங் கொன்றுதல்போல் என்
றவரோ. 28

(ந-ரை) வெய்ய-வெப்பம் (மிக்க), கனலின்-அக்கிநியின், சூடு-உஷ்ணம், மேல் வைத்த-(தணலின்) மீது வைக்கப்பட்ட, சட்டியின் ஊடு-பாத்திரத்தின்கண், உய்ய - விடப் பெற்ற, புனல் ஊடு-ஜலத்தினிடத்தில், வந்து - நெருங்கி, ஒன்றுதல்-சேர்தல், போல்-ஒப்ப, என்றவரோ - எனக் கூறிய பகவானே (நீர்). (எ-று).

இதனை தப்த (காய்ச்சிய) ஜல (நீர்) அக்கிநி (நெருப்பு) நியாயம் (திருஷ்டாந்தம்) என்பர். 28



சித்தாகும் ஆந்மாவும் சேடம்ஆகும் சித்தமும்
தான், ஒத்தாங்கி ரண்டும்ஒன்றாய் உற்றவகை
சாற்றும்என. 29

(ந-ரை) சித்து ஆகும்-அறிவு ரூப மாகிய, ஆந்மாவும்-ஆத்மாவும், செடம் ஆகும்-அறி வின்றிய தாகும், சித்தமும்-மநமும், இரண்டும்-(ஆந்மாவும் மநமும்) ஆகிய இரண்டும். ஒத்த ஆங்கு-வேறுபா டின்றி, ஒன்றாய்- ஒற்றுமையாய், உற்ற வகை - சேர்ந்த விதம், சாற்றும் - கூறும், என-என்று, அர்ஜுநன் வினவ. (எ-று) தான் அசை. 29

வல்இரும்பு கனல்உடனே மருவியது போல்
மநமும், ஒல்லையில்ஆந் மாவுடனே உற்றதுகாண்
என்றவரோ. 30

(ந-ரை.) வல் - கடிந மான, இரும்பு - அயம், கனல் உடன்-தீ யுடன், மருவியது - சேர்ந்தது, போல்-போன்று, மநமும்-சட மாகிய) மநமும், ஆந்மாவுடன்-(சித் தாகிய) ஆத்மாவோடு, ஒல்லையில்-அநாதி யாகவே, உற்றது-(அபேத மாகப்) பொருந்தியது, என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று)

இதனை தப்த, காய்ச்சிய, அயப் பிண்ட இரும்புத் துண்ட, நியாயம் - திருஷ்டாந்தம், என்பர். காண் முன்னிலை அசை. 30

உற்றதேத னால்எனவே உள்ளம்அவி வேகம் உறப், பற்றியதன் மேலும்அதன் பண்புவந்த தேன்றவரோ. 31

(ந-ரை.) பற்றிய - பொருந்திய, தன் மேலும்- (ஆத்மா வான) தன் னிடத்தும், அதன் பண்பு- மநத்தின் தர்மங்க ளாகிய (சுக துக்க இச்சை யாதி) சுபாவம், உற்றது-பொருந்தியது, எதனால்- எக் காரணத்தினால், என-என்று விஜயன் கேட்க, (அதற்கு பகவான்) உள்ளம்-மநம், அவிவேகம்- அவிசாரத்தினை, உற - பொருந்த, வந்தது-(மநத் தின் தர்மம் ஆத்மா விடத்து) பொருந்தியது, என்றவரோ - என் றருளிச் செய்த பகவானே (நீர்) (எ-று) 31

அடுத்தகுணம் போமோபின் ஆந்மாவை விட் டேனவே, எடுத்தசெம்பூ நிறம்படிகத் தேறுதல் போல் என்றவரோ. 32



(ந-ரை) ஆந்மாவை - (அந்தர்) ஆத்மாவினை, அடுத்த - அணுகிய, குணம் - டண்புகள், பின்- (உண்மை அறிவு உதித்த) பிறகு, விட்டு போ மோ-(ஆந்மாவை) விட்டு நீங்குமா, என - என்று (கிரீடி) வினவ, (பகவான்) எடுத்த-பறித்த, செம் பூ-செவ் அரத்தம் புஷ்பத்தின், நிறம்-(சிகப்பு) நிறம், படிகத்து-(வெண்மை) ஸ்படிகத்தில், ஏறு தல்-படிந்து தோன்றுதல், போல்-ஒப்ப. என்ற வரோ-என்று அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று)

இதனை ரக்த (சிவப்பு) ஸ்படிக (படிகம்) நியா யம் (திருஷ்டாந்தம்) என்பர். 32

சுத்தபடி கம்போல்சொ ருபமாய்த் தான் இருக்க, மெத்தவும்ஆ சாமலிநம் மேவியதேன் சொல்லும்என. 33

(ந-ரை) சுத்த:களங்கம் இன்றிய-படிகம்போல் பளிங்கினைப் போல, தான் (ஆந்மா வாய) தான், சொருபம் ஆய்-(சச்சிதாநந்த)வடிவ மாக,இருக்க- (ஒரு படித் தாக) இருப்ப, ஆசா-ஆசை யாகிய, மலிநம்-களங்கம், மெத்தவும்-மிகவும், மேவியது-

(ஆத்மாவினைப்) பொருந்தியது, என்-யாது கார ணம்-சொல்லும்-கூறும்,என-என்று (அர்ஜுநன்) கேட்க. (எ-று) 33

அநாதிஆம் வாசனையால் அடைந்ததா சாமலிநம், மநோபந்தம் இருக்கின்முத்தி வாராதென் றுரைத்தவரோ. 34

(ந-ரை.) அநாதி ஆம்-பழமை ஆன, வாசனை யால்-சம்ஸ்காரத்தினால், ஆசா. அவா வாகிய, மலி நம்-களங்கம், அடைந்தது- (ஆத்மாவினைப்) பற்றியது, மநோ-மநத்தின்கண், பந்தம்-(சம்சாரக்) கிரந்தி, இருக்கின்-இருக்கு மாயின், முத்தி-சுகம் (மோக்ஷம்), வாராது-சித்தியாது, என்று-என, உரைத்தவரோ-உபதேசித்தபகவனே(நீர்) (எ-று)

பந்தம்எது முத்திஎது பகுத்துரைக்க வேண்டும் என்தன், சிந்தைதே ளியஎன்று திருத்தாளிணைவணங்க. 35

(ந-ரை) பந்தம்-வாசநா ரூபம், எது-எவை, முத்தி-மோக்ஷம், எது-யாது, பகுத்து- (இவற்றைப்) பிரித்து, என்-அடியேனது, சிந்தை-சித்



தம், தெளிய-விளங்க, உரைக்க வேண்டும்-கூறியருள வேண்டும், என்று-என. (விண்ணப்பித்து), திரு-அழகிய, தாளிணை-பாதங்களை, வணங்க-(அர்ஜுநன்) நமஸ்கரிக்க. (எ-று)தன் அவசர. 35

தேகாதி தான்எனவே சேர்அபிமா நங்கள் பந்தம், ஆகாத மாநம்விடில் அரியமுத்தி என்றவரோ. 36

(ந-ரை) தேக ஆதி-சரீராதி (பிராணமயாதி கோசங்கள்) முதலியவற்றை, தான்-தன்(ஆத்ம) சொருபம், என-என்று, சேர்-வருகின்ற, அபிமாநங்கள்-(வாசநா வடிவ) பற்றுக்களே, பந்தம்-பந்தமாம், ஆகாத (மோக்ஷ சுகத்திற்கு) அநுகூல மாகாத, மாநம்-அபிமாந வடிவ பந்தம், விடில்-நீங்கில், அரிய (அடைதற் கரிய) மே லான, முத்தி-மோக்ஷம் ஆம், என்றவரோ என அருளிச் செய்த பகவானே (நீர்) (எ-று) 36

அபிமாநம் வரும்வகையும் ஆங்கதனைத் தீர்வகையும். தபியாமல் நான்அறியத் தயவர்க்கீ கூறும் என. 37

(ந-ரை) அபிமாநம்-(தேகாதிகளில் வரும்)பற்று வடிவ பந்தம், வரும் வகையும்-வருகின்ற தன்மையும், அதனை-அவ் அபிமாநத்தினை, தீர் வகையும்-நிவிர்த்திக்கும் தன்மையினையும்,நான்-அடியேன், தபியாமல்-தாபம் அடையாமல், அறிய-உணர்தற் பொருட்டு,தயவு ஆக-கிருபையோடு,கூறும்-சொல்லும், என-என்று (அர்ஜுநன்) வினவ. (எ-று) ஆங்கு அசை. 37

மறந்திடும்அஞ் ஞாநத்தால் மாநம்வந்த தஞ்ஞா நம், இறந்துவிடின் மாநமும்போம் என்னஉரை செய்தவரோ. 38

(ந-ரை.) மறந்திடும்-(தனது ஸ்வரூபத்தினை) மறக்கின்ற, அஞ்ஞாநத்தால்-(மறதி எனும்) அறியாமையினால், மாநம்-அபிமாநம் (தேகாதிகளில் நான் என்னும் புத்தி), வந்தது-வந்து பொருந்தியது, அஞ்ஞாநம் - (அவ்) அஞ்ஞாநம், இறந்துவிடின்-நாசம் ஆயின, மாநமும்-(அவ்) அபிமாநமும், போம் -நிவிர்த்தி யாம,, என்ன-என்று, உரை செய்தவரோ-கூறியருளிய பகவானே (நீர்) (எ-று) 38



அந்தமுறை அஞ்ஞாநம் அணுகுவதும் போவதுவும், சந்தயம்இ லாதறியத் தயவாகக் கூறும் என. 39

(ந-ரை) அந்த முறை - (முன் கூறிய) அப்படியே, அஞ்ஞாநம-(அவ்) அறியாமை, அணுகுவதும்-பொருந்துவதனையும், போவதுவும்-நீங்குவதனையும், சந்தயம்-(யான்) ஐயம், இலாது-இன்றி, அறிய-உணரும் பொருட்டு, தயவு ஆக-கிருபையோடு, கூறும்-திரு வாய் மலர்ந் தருளும், என-என்று, (அர்ஜுநன்) வினவ. (எ-று) 39

அஞ்ஞாநம் வந்தத நாதியது சொல்வதல்ல, மெய்ஞ்ஞாநத் தாலேவி டும்என்று ரைத்த வரோ. 40

(ந-ரை) அஞ்ஞாநம் - (ஆத்மாவின் அவ்) அறியாமை, அநாதி-பழமை யாக உள்ளது, அது-அவ் அஞ்ஞாநம், வந்தது (ஆக)-(இடையில்) வந்துள்ள தாக, சொல்வது அல்ல - கூறத் தகுந்ததன்று, (ஆனாலும் ஞாநத்தினால் நிவிர்த்தி யாம் என்றபடி) மெய் ஞாநத்தாலே-(சற் குரு உபதேச

பிரமாத்ம ஐக்கிய) தத்துவ ஞானத்தினாலேயே, விடும்-நிவிர்த்தி யாம் (கருமத்தினால் அன்றாம் என்ற படி), என்று-என, உரைத்தவரோ-கூறி யருளிய பகவானே (நீர்). (எ-று) 40

இரவிஎதிர் அடுத்துவந்த இருள்போல அஞ்ஞா
நம், வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை
ஏதேனவே. 41

(ந-ரை) இருள்-அந்தகாரம், இரவி-சூரியனது, எதிர்-முன்னர், அடுத்து-நெருங்கி, வந்த-வந்துள்ளது (போந்தது) (என்பது) போல-எனல் (சிறிதும் பொருந்தாமை) ஒப்ப, சோதிபால் - பிரகாசரூப ஆத்மாவினிடத்து, அஞ்ஞானம் - (இருள் வடிவ) அறியாமை, வர- (பொருந்தி) வருதல், விதியோ-முறையோ (முறை யாகாது) அதாவது ததுதி யன்று என்றபடி), வந்த வகை-அது ஸ்வயம் பிரகாச ஆத்மாவைப்பொருந்தி (வந்ததென்னும்) விதம், ஏது - எப்படி, என - என்று (அர்ஜுனன்) கேட்க (எ-று) தன் அசை. 41

அந்தஅ றிவுவந்தால் அஞ்ஞானம் இல்லைஅப்
பால். சந்ததமும் ஆநந்த சாகரம்காண் என்ற
வரோ. 42



(ந-ரை) அந்த அறிவு - (ஸ்வயம் பிரகாசப் பிரஹ்ம ரூப ஆத்மாவில் அஞ்ஞான இருள் அணுகாதென்னும்) அவ் வித (அதிஷ்டான,) விவேகம், வந்தால்- (திட மாய்) உண்டாயின், அஞ்ஞானம்-அறியாமை என்பது, இல்லை - (ஆத்மாவில் உண்மை யாய் ஒரு போதும்) இன்றாம், (பின்னர் யாது உளதேனில் கூறுகின்றார்) அப்பால் - (இவ் வித அதிஷ்டான விவேகம் திட மாய்த் தோன்றிய) பின், சந்ததமும்-சதா காலமும் ஆநந்த சாகரம்-இன்பக் கடல் வடிவம் (நினது சொரூபம் என்பதை), காண் (நீ நன்றாய்) அறிவாய், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்.) (எ-று), 42

வேதாந்த நூல்குருவால் மெய்ஞ்ஞானம் வந்த
வுடன், தீதான துக்கசுகம் தீராத தேதேனவே. 43

(ந-ரை.) குருவால்-(திட அபரோக்ஷ ஞானம் உடைய) ஆச்சாரியர் உபதேசத்தினாலும், வேதாந்தத்தால்-அத்யாத்ம சாஸ்திர சிரவணத்தினாலும், மெய் ஞானம்-உண்மை யான (ஆத்ம) ஞானம், வந்த உடன்-வந்த அந்த க்ஷணத்திலே (அஞ்ஞானம் நாசமாயின்), தீது ஆன-கொடிது ஆன, துக்க சுகம்-

(அதன் காரிய) துன்ப இன்பங்கள், தீராதது-நிவிர்த்தியாகாதது, ஏது-யாது (காரணம்), என-என்று, (அர்ஜுனன்) கேட்க. (எ-று)

காரணம் கெட்ட பின், காரியம் இருத்தல் கூடாது எனச் சங்கிக்கின்றான். 43

பற்றறுமோ துக்கசுகம் பரோக்ஷஞா நத்தாலே,
அற்றம்ஆம் அவ்இரண்டும் அபரோக்ஷத் தென்
றவரோ. 44

(ந-ரை.) பரோக்ஷஞானத்தால்-சாஸ்திர ஜந்ய(தத்துவ) ஞானத்தினால் (அஞ்ஞானம் நீங்காதபோது), துக்க சுகம்-(அதன் காரிய) துன்ப இன்பங்களின், பற்று-சம்பந்தம், அறுமோ-நீங்குமோ (நீங்கா தென்பது கருத் தாம்), (பின் எந்த ஞானத்தினால்-நீங்கும் எனில் கூறுகின்றார்) அபரோக்ஷத்து அபரோக்ஷ ஞானத்தினால் (அஞ்ஞானம் நசிக்க) அவ் இரண்டும் - அந்தச் சுக துக்கங்கள் இரண்டும், அற்றம் ஆம் - நாசம் ஆம், என்றவரோர்-என அருளிச் செய்த பகவானே (நீர்.) (எ-று.) 44

பரோக்ஷம்அப ரோக்ஷம்எது பகுத்துரைக்க
வேண்டும்என்தன், திரோதம்ஆம் புத்திநன்றத்
தெளியும்ப டிக்கெனவே. 45



(ந-ரை,) பரோக்ஷம்-பரோக்ஷ ஞானம்(என்பது), எது-யாது, அபரோக்ஷம் எது-அபரோக்ஷ ஞானம் (என்பது) யாது, என்-அடியேனது, திரோதம் ஆம் புத்தி-மறைப் புடைய தாகிய புத்தி, நன்று-செவ்வை யாக, தெளியும்படிக்கு-(அம் மறைப்பு நீங்கித்) தெளிவை அடையும்படிக்கு, பகுத்து-(இவ் இரண்டின் இயல்புகளைப்)பிரித்து, உரைக்க வேண்டும்-கூறி யருள வேண்டும், என - என்று (அர்ஜுனன்) கேட்க, (எ-று) தன் அசை. 45

பகர்ந்தசத்த ஞானம்ப ரோக்ஷம்அ நுபவத்தால்,
அகம்பிரமம் எனுஞானம் அபரோக்ஷம் என்ற
வரோ. 46

(ந-ரை.) சத்த ஞானம்-சப்த (ரூப சாஸ்திரத்தினால் உண்டான) அறிவு. பகர்ந்த - (முன்னர்க்) கூறிய. பரோக்ஷம்-பரோக்ஷ (ஞானம்) ஆம், அநுபவத்தால்-(விசார தியாந) அப்பியாச முதிர்ச்சியால், அகம்-நான், பிரம்மம் - (எங்கும்) வியாபக வஸ்து, எனும்-என உண்டாகின்ற, ஞானம்-ஞானம், அபரோக்ஷம்- அபரோக்ஷ (ஞான) மாம், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று). 46

தான்பிரமம் என்றறிந்தும் தநுவைத்தான்
என்றபுத்தி. ஏன்போக இல்லைஅதை எனக்
கறியப் புகலும்என. 47

(ந-ரை) பிரமம் - (சச்சிதாநந்த) வஸ்துவே, தான்-தனது சொரூபம், என்று-என, அறிந்தும்-(அபரோக்ஷமாய்) உணர்ந்த பின்னும், தநுவை-(முன் போல்) சரீரத்தினையே, தான் - தனது சொரூபம், என்ற-என்கின்ற, புத்தி - (விபரீத) ஞானம், ஏன்-யாது காரணத்தினால், போக இல்லை-நீங்க இல்லை, அதை-அக் காரணத்தினை, எனக்கு-அடியேனுக்கு, அறிய-தெரியும்படி, புகலும்-கூறியருளும், என-என்று, (அர்ஜுனன்) கேட்க. (எ-று). 47

கேள்வியினால் மநநத்தால் கிளர்ந்தயோ கங்க
ளினால், ஆள்பிரமத் தநுபவம்வந் ததுதீரும் என்ற
வரோ, 48

(ந-ரை-) அது-தேகாத்ம புத்தியானது, கேள்வியினால்-(ஷட் வித லிங்க தாற்பரிய) சிரவணத்தினாலும், மநநத்தால் - மநநத்தினாலும், கிளர்ந்த-விளங்காநின்ற, யோகங்களினால் - (விசார)



நிதித்தியாசநங்களினாலும், பிரமத்து - (பிரத்தியகபிந்ந) பிரஹ்மத்தினது, ஆள்ம் - அழுந்திய (அதாவது திடமான), அநுபவம் வந்து - அபரோக்ஷ ஞானம் வருதலால், அது-தநுவைத் தான் எனும் புத்தி, தீரும்-நிவிர்த்தி யாம் என்றவரோ-என அருளிச் செய்த பகவானே(நீர்). (எ-று). 48

ஆதியாம் சித்சொரூபம் ஆகாத தான்இனிமேல்,
சோதி மந நாதியினால் சொரூபம்ஆ மோஎனவே. 49

(ந-ரை) ஆதி ஆம் - முதன்மை யாகிய, சித் சொரூபம்-சேதந ரூபப் பிரஹ்மம், ஆகாத-ஆக (முன்னர்) இராத, தான்-(ஆத்மா வாகிய) தான், மநந ஆதியினால்-(சிரவண) மநந, விசார, நிதித்தியாசநங்களினால், இனி மேல் - பின்னர், சோதி சொரூபம்-சேதந ரூபப் பிரஹ்மம், ஆமோ-ஆகுமோ, என-என்று, (அர்ஜுனன்) வினவ. (எ-று) சுபாவ சித்தமா, செய்கையினால் சித்தமா என்பது கேள்வி. 49

எப்போதும் சிந்மயம்தான் எனல்மறந்து தேடு
வது, செப்புமிடற் றணிஇருக்கத் தேடுதல்போல்
என்றவரோ. 50

(ந-ரை) தான்-(ஆத்மா வாகிய) தான், எப்போதும்-முக் காலத்தும், சிந் மயம்-சித் ஸ்வரூபமே, எனல்-என்பதனை, மறந்து-அயர் வுற்று, தேடுவது-(தனது யதார்த்த ஸ்வரூபம் சிந்மயமாவ தெங்ஙன் என) விசாரிப்பது, செப்பு-(அழகின் பொருட்டுத் தான் முன்னர் அணிந்துள்ள தாகச்) சொல்லப்படுகின்ற, அணி-ஆபரணம், மிடற்று-(தனது) கண்டத்தில், இருக்க-இருக்கும் போதே, தேடுதல்-(அதனை மறந்து, அது தவறி விட்ட தாக எண்ணி) விசாரித்தல், போல்-போல ஆம், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று)

இதனை, கண்ட (கழுத்து) சாமீகர (பொன் நகை)நியாயம்(திருஷ்டாந்தம்)என்று கூறுவர். 50

தேடியபின் தேகபுத்தி தீர்ந்துபோய்ச் சித்சோரூபம், கூடுவனோ யான்என் குறைதீரச் சொல்லும் என. 51

(ந-ரை.) தேடிய பின்-(சிரவண மநந நிதித்யாசநங்களினால்) விசாரித்த பின், தேக புத்தி-தேகாத்ம புத்தி, தீர்ந்து போய்-விட்டு நீங்கி, சித்



சொரூபம் - சேதநப் பிரஹ்ம ஸ்வரூபத்தினை, யான்-நான், கூடுவனோ - அடைவேனோ, என்னது, குறை-பூர்த்தி யின்மை (நிறை வின்மை) தீர-நீங்க, சொல்லும்-கூறியருளும், என-என்று (அர்ஜுநன்) வினவ. (எ-று)

ஆண்டான் அடிமையா? எனச் சங்கித்தல். 51

வந்தஉடல் வேறயும் வாசனையால் தான்என லால், சந்தயம்என் தன்சோரூபம் தான்ஆதற் கேன்றவரோ. 52

(ந-ரை.) வந்த-(கருமத்தினால்) உண்டாய, உடல்-சரீரம், வேறு ஆயும்-(தனக்கு) அந்நியமாயிருந்தும், வாசனையால்-(ஜந்மாந்தர) சம்ஸ்காரத்தினால், தான்-தன் சொரூப மாய ஆத்மா, என லல்-என்று (திட மாய்க்) கூறுகின்றபடியினால், தன்-தனது, சொரூபம்-(உண்மை யான) ஆத்ம சொரூபமே, தான் ஆதற்கு-தனது சொரூப மாக நிலைத்தற்கு, சந்தயம்-சம்சயம் (ஐயம்), என்-யாதுளது, என்றவரோ-என அநுக்கிரகித்த பகவானே (நீர்.) (எ-று) ஸ்வபாவ சித்தமே எனக் கூறிய தாம். 52

தநுவைத்தான் எனுப்பிரமை சத்தஞா நத்தில்
அற, தநுபவமெய்ஞ் ஞாநத்தால் அறும்வகையே
துரையும் என. 53

(ந-ரை.) தநுவை - சரீரத்தினை, தான்-தன் சொரூப ஆத்மா, எனும்-என்று (சந்தேக விபரீத மின்றி) அறியும், பிரமை-(அபரோக்ஷப்)பிராந்தி, சத்த ஞாநத்தில்-சாஸ்திர ஜந்ய ("சரீரம் ஆத்மா வன்று", எனும் பரோக்ஷ) ஞாநத்தினால், அறாது-நீங்காமல், அநுபவம்-("இச் சட சரீரத்திற்கு வேறாய் இத்ற்கு ஆதார மாய சேதந வடிவ ஆநமாவே நான்" என்னும் நிச்சய மாகிய) அநுபவ ரூப மான, மெய் ஞாநத்தால்-(சந்தேக விபரீத மின்றிய) திட அபரோக்ஷ ஞாநத்தால், அறும் - நீங்குகின்ற, வகை-காரணம், ஏது-யாது, உரையும்- (என்பதைக்) கூறியருளும், என-என்று (அர்ஜுநன்) கேட்க. (எ-று) சமாந விரோதி யின்மையின் நீங்க வில்லை என்ப தாம். 53

விளக்குவிளக் கெனும்அதனால் வெய்யஇருள்
போய்விடுமோ, துளக்கம்இலா விளக்கேற்றில்
தொலையும்இருள் என்றவரோ. 54



(ந-ரை) விளக்கு விளக்கு-தீபம் தீபம் எனும் அதனால்-என்று வாயால்கூறுகின்றதனால்,வெய்ய-கொடிய, இருள்-அந்தகாரம், போய்விடுமோ-(பயந்து) நீங்குமோ, (நீங்காது என்றபடி), [பின் எதனால் நீங்கும் எனில் கூறுகின்றார்.], துளக்கம் இலா-சலநம் இல்லாத, விளக்கு-தீபத்தினை, ஏற்றில்-ஏற்று மிடத்து, இருள்-அந்தகாரம், தொலையும்-நாசம் ஆகும், என்றவரோ-என அநுக்கிரகித்த பகவானே (நீர்.) (எ-று) சமாந விரோதியால் நிவிர்த்தி யாம் எனக் கூறிய தாம். அது போல், அபரோக்ஷப் பிராந்தி, அபரோக்ஷ ஞாநத்தால் நிவிர்த்தி யாம் எனக் கூறிய தாம், 54

நெடும்காலம் ஆந்மாவை நீங்காத அஞ்ஞாநம்,
விடும்காலம் எந்நாளோ மெய்ஞ்ஞாநத் தால்
எனவே. 55

(ந-ரை.) ஆந்மாவை-ஆத்மாவை, நெடும் காலம்-நீ ணாளாக, நீங்காத-விலகாத (கூடவே இருந்த), அஞ்ஞாநம்-அறியாமை யானது, மெய் ஞாநத்தால் (அபரோக்ஷ) தத்துவ ஞாநத்தினால், விடும் காலம்-நீங்குகின்ற காலம், எம் நாளோ - எக்

காலமோ (யான் அறிகிலேன்), என - என்று, (அர்ஜுனன்) கேட்க. (எ-று)

அநாதி கால அஞ்ஞாநம், அநாதி கால ஞாநத்தால் தான், நீங்குமோ எனக் கேட்கின்றான், 55

அந்தகாரம்குகையில் ஆயிரம்நாள் இருந்தாலும், செம்தீபம் கண்டவுடன் தீர்வதுபோல்என்றவரோ. 56

(ந-ரை.) குகையில்-(மலையில் உள்ள) குகையின்கண், அந்தகாரம்-இருள், ஆயிரம் நாள்-நீணாளாக, (அந்தக் குகை உண்டான நாள் தொட்டு), இருந்தாலும்-இருந்திருப்பினும், செம் - சிறந்த, தீபம்-விளக்கினை, கண்ட உடன்-பார்த்தபோதே, தீர்வது-(தாமதமின்றி) நீங்குவது, போல்-ஒப்ப, அநாதியாயுள்ள அஞ்ஞாநமும், தத்துவ ஞாநம் (உதயமானவுடன் நிவிர்த்தியாம்), என்றவரோ- என அநுக்கிரகித்த பகவானே. (நீர்,) (எ-று).

இதனை, அந்தகார (இருள்) தீப (விளக்கை) தர்சந நியாயம் (பார்த்தல் உதாரணம்) என்பர்.

அநாதி அஞ்ஞாநம், ஞாந சம கால நிவிர்த்தியாம் எனக் கூறினர். 56



கருமயோகம்தவமே காரணம்ஆய் நீங்காமல், அருமையா ஞாநம்வந்தோ அஞ்ஞாநம் போம் எனவே. 57

(ந-ரை) அஞ்ஞாநம்-மூலாவித்தையானது, கருமம்-(யாகாதி புண்ணிய) கருமங்கள், யோகம்-(பிராண பந்தந) யோகம், தவம்-(கிருச்சிர சாந்திராயணாதி) தபம், (ஆகியவற்றையே,) காரணம்ஆ(க) - ஏதுவாகக் கொண்டு, நீங்காமல்-நிவிர்த்தியாகாமல், அருமை ஆம் ஞாநம் - அடைதற்கரிய (திட அபரோக்ஷ) ஞாநம், வந்தோ - உண்டான பின்னரோ, போம்-நீங்கும், என - என்று (அர்ச்சுநன்) கேட்க. (எ-று)

மாநசீகக் கிரியையால் நீங்காமல், அபரோக்ஷ ஞாநத்தால், நீங்குவது என்ன காரணம் எனக் கேட்டனர். 57

குத்துவெட்டும் படைகளினால் கூடுமோ இருள் தூக்க, உத்தமம்ஆம் ரவிஉதித்தால் ஓடும்இருள் என்றவரோ. 58

(ந-ரை.) குத்து-குத்துதற்குரியவும், வெட்டும்-வெட்டுதற்குரியவுமான, படைகளினால்-(ஈட்டி,

வாள் முதலிய) ஆயுதங்களினால், இருள் -அந்தகாரத்தினை, துரக்க-நிவிர்த்திக்க.கூடுமோ-முடியுமா? (முடியாது என்றபடி.) (பின் எதனால் கூடும் எனில் கூறுகின்றார்) உத்தமம் ஆம்- (உலகிற்கு எல்லா நன்மைகளையும் செய்விக்கும்)உயர் வாகிய, இரவி-சூரியன், உதித்தால்-உதயமானால், இருள்-அந்தகாரம், ஓடும்-நாச மாம், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்) (எ-று)

இதனை, சூரிய சந்நிதியில் அந்தகார (இருள்) நாச (அழிவு) நியாயம் என்பர்.

விரோதி தரிசநத்தால் தனக்கு அழிவு வரும் என்ப தாம். 58

அஞ்ஞாந விருள்துரக்க அறியாத நல்லகன்மம் மெய்ஞ்ஞாலம் தனைப்பரிக்கும் விதம்எவ்வா றென வினவ, 59

(ந-ரை.) அஞ்ஞாந- அவித்தை யாகிய, இருள்-அந்தகாரத்தினை, துரக்க - நிவிர்த்திக்க, அறியாத-தெரியாத. நல்ல-புண்ணிய, கன்மம்-கர்மம் (யோகம் தவங்கள்) மெய்-சத்தியமா யிருக்கின்ற, ஞாலம்தனை-பிரபஞ்சத்தினை,பரிக்கும்-காக்கின்ற,



விதம்-தன்மை, எவ் வாறு - எப்படி? என-என்று, வினவ- (அருச்சுநன்) கேட்க. (எ-று)

கர்மாதிகள், சத்திய உலகை காப்பது எவ் வாறு எனக் கேட்ட லாம். 59

இந்திரசாலம்போல இவ்உலகை நம்மிடத்தில், தந்திரம்ஆய்த் தோற்றுவித்தோம் சத்யம்அல என்றவரோ. 60

(ந-ரை.) இந்திர சாலம் போல-இந்திர சாலக்காரனது (வித்தையால் தோன்றிய பதார்த்தங்கள் பொய்யாய்த் தோற்றுவது) போல, இவ், உலகை-இந்தப் பிரபஞ்சத்தினை, நம் இடத்தில், ஆத்மாவில், தந்திரம் ஆ (க) - உபாய மாக (அதாவது சத்திய மல்லாததைச் சத்தியம் போலத் தோற்றும்படி சூழ்ச்சி யாக) தோற்றுவித்தோம்-உண்டாக்குவித்தோம், சத்யம் அல - (ஆகவின் இது) உண்மை யன்று(மித்தையே,) என்றவரோ-என அருளிச் செய்த பகவானே. (நீர்) (எ-று)

மெய்யில், பொய் தோன்றுவது போல, சத்ய ஆத்மாவில், பொய்ப் பிரபஞ்சம் தோன்றும் என்ப தாம். 60

மித்தைஎனும் சகத்துநின்பால் விளங்குமோ
எனவினவ, சுத்திதனி லேரஜதம் தோன்றுதல்
போல் என்றவரோ. 61

(ந-ரை.) மித்தை - பொய், எனும் - என்று (அநுபூதிமான்களும், சுருதியும்) கூறும், சகத்து-பிரபஞ்சம், நின்பால் - (சத் ரூப மான) உன்னிடத்து, விளங்குமோ-பிரதீதி யாமோ, என-என்று, வினவ-(அர்ஜுநன்) கேட்க, (அதற்குச் சமாதானம் கூறுகின்றார்,) சுத்திதனில்-வியாவகாரிக சத்திய மான) குளிஞ்சிலி னிடத்து, ரஜதம்-(பிராதிபாசிக மித்தை யான) வெள்ளி, தோன்றுதல்-பிரதீதியாதல், போல்-ஒப்ப (ச் சத்தியப் பிரஹ்ம வடிவ நம் இடத்தில், இம் மித்தை யாகிய சகத்துத் தோன்றுதல் பொருந்தும்,) என்றவரோ-என்று அநுக்கிரகித்த பகவானே (நீர்.) (எ-று)

இதனை, சுக்திகா (கிளிஞ்சில்) ரஜத (வெள்ளி) நியாயம் (திருட்டாந்தம்) என்பர். 61

அயல்வெள்ளி சுத்தியின்மேல் ஆரோபி தம்
கூடும், இயல்உள்ள சகமுமுன்வே றிருந்ததும்
உண் டோஎனவே. 62



(ந-ரை) அயல்-(ஆரோபிதத்திற்கு) அந்நியமான, வெள்ளி - (வியாவகாரிக சத்திய) ரஜதம்-சுத்தியின் மேல் - (விபாவகாரிக)க் கிளிஞ்சிலினிடத்து, ஆரோபிதம்-பொய்த் தோற்றம், அல்லது, அத்தியஸித்தல், கூடும்-பொருந்தும், உள்ள இயல் - (அது போல) உண்மை யான இயல்புடைய (அதாவது சத்தியத் தன்மை வாய்ந்த,) சகமும்-பிரபஞ்சமும், முன்-(இவ் வாரோப சகத்திற்குப்) பூர்வம், வேறு-(இதற்கு) அந்நிய மாக, இருந்ததும்-(சத்திய மாக)இருந்தமை, உண்டோ-உளதோ? என-என்று (அர்ஜுநன்) கேட்க. (எ-று) சத்திய வஸ்து ஜந்ய சம்ஸ்காரமே, அத்தியாச காரண மாம் எனக் கேட்டதாம். 62

மநம்மயக்கம் பிடிக்கில்இல்லா வத்துவும்
தோன் றிடும்அதுவோ, கநவில்விண்ணில் தான்
பறக்கக் கண்டதுபோல் என்றவரோ. 63

(ந-ரை,) மநம் - உள்ளம், மயக்கம்-மோகம், பிடிக்கில்-அடையில், இல்லா வத்துவும்-(மூன்று காலத்தும்) இல்லாத பதார்த்தமும், தோன்றிடும்-(ஆரோப மாக) விளங்கும், அது - அது, (எது

போல் எனில்), கனவில் - ஸ்வப்நாவஸ்தையில், தான்-தானே (தன்னை), விண்ணில்-ஆகாயத்தில், பறக்க-பறப்ப தாக, கண்டது-பார்த்தது, போல்-போல, என்றவரோ-என அருளிச் செய்த பகவானே, (நீர்) (எ-று)

இது சத்ய வஸ்து ஜந்ய சம்ஸ்கார காரணங்கள் இன்றியும்,பிராந்தி உண்டாம் என்று கூறுவது. 63

கநவுபோல்ப்ப பஞ்சம்என்றீர் கண்விழித்தால்
கநவுபொய்யாம், வினவுச்சகம் திநமும்மெய்யா
விளங்குவதேன் சொல்லுமென. 64

(ந-ரை.) கனவு-ஸ்வப்ந(உலக)ம், போல்-மித்தையாவது) போல, பிரபஞ்சம்-இவ் உலகமும், என்றீர்-(மித்தை) எனக் கூறியருளினீர். [திருஷ்டாந்தம் விஷமம் என வினவுகின்றன்] கனவு-அச்சொப்பனப் பிரபஞ்சமும் சொப்பனமும், கண் விழித்தால்-ஜாக்கிராவஸ்தையினை அடைந்தால், பொய் ஆம் - மித்தையாய் (ப் போய்) விடும், வினவு-(நான்) கேட்கின்ற. சகம்-இப் பிரபஞ்சம், திநமும்-நாள தோறும், மெய் ஆ(க)-சத்தியம ஆக, விளங்குவது-தோற்றுவது, என்-யாது காரணம்,



சொல்லும் - (என்பதனைக்) கூறியருளும், என-என்று (அர்ஜ்ஜுநன்) கேட்க (எ-று) 64

மெய்ஆக விளங்குவது மெய்ஞ்ஞாநம் வரும்
அளவும், பொய்யாமபின் கநவதுபோல் போதம்
வரில் என்றவரோ. 65

(ந-ரை) மெய் ஞாநம்-(திட)தத்துவ ஞாநம், வரும் அளவும்-வருகின்ற வரையும், மெய் ஆக-(இவ் உலகம) சத்தியம் ஆக, விளங்குவது-தோற்றுவ தாம், பின்-பின்னர். போதம்-(திட தத்துவ) ஞாநம், வரில்-வரும் ஆயின், கநவது போல்-ஸ்வப்நமும், ஸ்வப்ந உலகமும் போல், பொய் ஆம்-(இச் சாக்கிரப் பிரபஞ்சம்) மித்தை யாம், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே(நீர்) (எ-று.) 65

முன்புகண்ட கநவுபொய்யாம் முழிசாக்ரம்
போலஎன்றீர், பின்புமுத்தித் தசைஅடைந்தும்
பிரபஞ்சம்நிற்ப தேதேனவே. 66

(ந-ரை.) முழி-கண் விழித்துக் கொள்கின்ற, சாக்ரம்-(வியாவகாரிக)சாக்ராவஸ்தையில்,முன்பு-பூர்வம், கண்ட-பார்த்த, கநவு - ஸ்வப்நமும்

ஸ்வப்ந உலகும், பொய்யாம்-மித்தையாம், போல-அஃதொப்ப (ஞாந சாக்ராவஸ்தையில் வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தை யாம்), என்றீர்-என அநுக்கிரகித்தீர். பின்பு-(ஞாநம் வந்த) பின்னர். முத்தி தசை-மோக்ஷ நிலையினை, அடைந்தும் - (அந்த ஞாநத்தால்) சார்ந்த தன் மேலும், பிரபஞ்சம் (வியாவகாரிக) உலகம். நிற்பது-(முன் போலத் தோன்றிக் கொண்டு) இருப்பது-எது-யாது காரணம், என-என்று (அருஜுநன்) வினவ. (எ-று) 66

தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம்
போல்வதல்லால், பரந்தசகம் காரியத்தில் பயன்
படா தென்றவரோ. 67

(ந-ரை.) தெரிந்தவர்க்கு - பிரஹ்மாபிந்ந ஆத்ம ஞாநிகளுக்கு, பரந்த-விரிந்த, சகம்-(வியாவகாரிகப்) பிரபஞ்சம், தோற்றுவது-பிரதீதியாவது, தெத்த-(நெருப்பினால்) தகிக்கப்பட்ட, படம் - வஸ்திரம், போல்வது அல்லால்-(குளிர் நீக்கலாதி காரியங்கட் குதவாது தோற்று மாத்திரமா யிருப்பது) போன் றிருப்பதே யன்றி, காரியத்தில்-(ஜெநந மரணத்தைக் கொடுத்த லாதி) காரியத்திலே,



பயன்படாது-(ஒரு சிறிதும்) பிரயோஜநப்படாது. என்றவரோ-என அநுக்கிரகித்த பகவானோ (நீர்). (எ-று)

இதனை தக்த (கொளுத்திய) பட (வேட்டி) நியாயம் (திருஷ்டாந்தப) என்பர். நிருபாதிகப் பிராந்தி யாகிய சொப்பநம் நிவிர்த்தியாம், சோபாதிகப் பிராந்தி யாகிய பிரபஞ்சம் தோன்றும் எனக் கூறிய தாம். 67

ஜன்மவினை அஞ்ஞாநம் கடந்தும்அதன் காரிய
மாம், புன்மையுறு மெய்உடனே போகாத தே
தெனவே. 68

(ந-ரை.) ஜன்மம்-(தேகாபிமாநம் இன்மையின் அதனைச் சம்ரக்ஷித்தலாகிய) தொழிலும் வினை-(அதற் கேற்ற) பிரயத்நமும் (முயற்சியும்), அஞ்ஞாநம்-(அவ் உடலின் உபாதாந காரண) அஞ்ஞாநமும், கடந்தும்-நீங்கியும், அதன்-அந்த ஞாநத்தின், காரியம் ஆம்-காரிய மாகிய, புன்மை-இழிவு, உறு-பொருந்திய, மெய்-(தூல) சரீரம், உடனே-அப் பொழுதே, போகாதது - நீங்காதது, எது, யாது காரணம், என-என்று (அர்ஜுநன்) வினவ. (எ-று)

காரணம் போன பின், காரியம் இருத்தல் கூடாது எனச் சங்கித்த தாம். 68

வெட்டவிழும் மரம்பசந்து விளங்குதல்போல் சிலகாலம், நட்டகன்மம் மாய்ந்தும்அங்கம் நடித் திடும்காண் என்றவரோ. 69

(ந-ரை.) வெட்ட-(கோடரி முதலியவற்றால்) தறிக்க, விழும - சாய்கின்ற, மரம் - விருக்ஷம், பசந்து - (காயாது) பசுமை யாக, சில காலம் - சொற்ப காலம், விளங்குதல்-தோற்றுதல், போல்-ஒப்ப, நட்ட-(அபிமானத்தோடு விரும்பி)ச் செய்கின்ற, கன்மம் -(அவ் உடலைச்) சம்ரக்ஷித்த (காத்த)ல் (சஞ்சிதவினை), மாய்ந்தும்-நாசம் ஆகியும், அங்கம்-(தூல)சரீரம், சில காலம-பிராரப்த கர்ம க்ஷய பரியந்தம், நடித்திடும்-சஞ்சரிக்கும், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று) காண் முன்னிலை அசை.

இதனை, தரு (மரம்) சேத (வெட்ட) ஆர்த்தர (ஈரத் தன்மை) நியாயம்-திருஷ்டாந்தம் என்பர், காரணம் போன பின்னும் காரியம் சில காலம் இருக்க லாம் என்ப தாம். 69



சென்மம்போய் முத்தியினைச் சேரச்சி லர்இருக் கத், தொன்மைஆந் மாபலவோ சொருபம் பகரும் என. 70

(ந-ரை,) சிலர்-சிறு ரன்மையோர்,செங்மம்)-ஜந்மத்தினின்றும், போய்-நீங்கி, முத்தியினை-மோக்ஷத்தினை, சேர-அடைய, (சிலர்) - சிலவர் (அதனைச் சேராமல், அதாவது பந்த முடையோராய்), இருக்க - இருத்தற் கேற்க, தொன்மை-அநாதியா யிருக்கின்ற, ஆந்மா-ஆத்மா, பலவோ-நாநாவோ (அல்லது, அப்படி அன்றே), சொருபம்-(அவ் வாந்மாவின் உண்மை) ஸ்வரூபத்தினை (வடிவினை), பகரும்-கூறி யருளும், என-என்று (அர்ஜுநன்) கேட்க. (எ-று).

ஏக ஆத்மாவா, நாநா ஆத்மாவா, என்பது கேள்வி யாகும். 70

பிரமம் என்றும் ஈசன் என்றும் பெருதுபல சீவர் என்றும், உரைமயக்கம் அலதாந்மா ஒருவனே என்றவரோ. 71

(ந-ரை.) பிரமம்-(தத் பத லக்ஷியப்) பிரஹ்மம், என்றும்-எனவும், ஈசன்(தத் பத வாச்சிய) ஈசு

வரன், என்றும்-எனவும், பெருகு-மிகுந்த, பல-நாநா, சீவர்-(த்வம் பத வாச்சிய)ஜீவர் (த்வம் பத லக்ஷிய கூடஸ்தர்), என்றும்-எனவும், உரை-கூறுவது, மயக்கம்-பிராந்தியே, அலது-அன்றி, ஆன்மா-(அதிஷ்டான) ஆத்மா, ஒருவனே-ஏகனே, என்றவரோ-என அநுக்கிரகஞ் செய்த பகவானே (நீர்), (எ-று)

ஏகாத்ம வாதமே கூறுகின்றார். பிராந்தியினால் நாநா ஆத்மத் தோற்ற மாம். 71

ஏகம்தான் ஆந்மா எனும் வகையே மெய்
ஆனால், ஆகம்தோறும்பலஆய் அமர்ந்ததென்றே
சொல்லும்என. 72

(ந-ரை.) ஆன்மா-ஆத்மா, ஏகம்-ஒன்று, எனும்-எனக் கூறும, வகையே-தன்மையே, மெய் ஆனால்-உண்மை ஆனால். ஆகம் தோறும்-சரீரங்கள் தோறும், பல ஆய்-(வேறு வே றாய்) நாநா வாக, அமர்ந்தது-பொருந்தியது, என்-யாது காரணம், சொல்லும்-(என்பதனைக்)கூறியருளும், என-என்று அர்ஜுனன் வின. (எ-று)

நாநா ஆத்ம வாத காரணம் யாது என வின விய தாம. ஓ-அசை நிலை. 72



பலகடத்தில் சலத்தூடு பாநுவிம்பம் தோன்று
தல்போல், தொலைவில்புத்தி தோறும்ஆந்மாத்
தோன்றுதல்காண் என்றவரோ. 73

(ந-ரை.) பல-நாநா, கடத்தில்-குடங்களில் (உள்ள), சலத்து ஊடு-சலத்தி னிடத்து, பாநு விம்பம்-(ஒரு) பிம்ப மாகிய சூரியன், தோன்று தல்-(நாநா வாகக்) காணப்படுதல், போல்-ஒப்ப, தொலைவு இல்-(எண்ணிக்கையின்கண்) முடிவில்லாத ("எண்ணித் தொலையாது" என்புழிப் போல), புத்தி-அந்தக் கரணங்கள் தொறும்-தோறும், ஆந்மா-(ஏகம் ஆன) ஆத்மா, தோன்று தல்-(பல வாகத்) தோன்றுகின்றமையை, காண்-(நீ) அறிவாய், என்றவரோ-என அருளிச்செய்த பகவானே (நீர்), (எ-று)

இதனை, பிம்பப் பிரதிபிம்ப (நிழல்) நியாயம் என்பர். பிம்பம், பிரமமும், ஆகாய சூரியனும் ஆம். பிரதிபிம்பம், ஜல சூரியனும், ஜீவ ஆத்மா வும் ஆகும். பிம்பப் பிரதிபிம்ப நியாயத்தால் ஒன்றே உபாதியால் நாநா வாகத் தோன்றலாம், 73

ஆதித்தன் போல்ஆர்மா அளவில்புத்தி தோறும்
தோன்றில், சாதிக்கும் முத்திஎவர் தமக்கதனைச் 74
சாற்றும்என.

(ந-ரை.) ஆதித்தன்-(ஏக) சூரியன், போல்-(பல கட சலங்களில் அவ் உபாதி வேறுபாட்டால் போல, ஆன்மா-(ஏகம் நாநா வாகத் தோற்றுதல்) போல, ஆன்மா-(ஏகம் இறந்த, ஆன) ஆத்மாவும், அளவு இல் - எண் இறந்த, புத்தி தொறும்-(உபாதிக ளாகின்ற) அந்தக் கரணங்கள் தோறும், தோன்றில்(பல வாகப்)பிரதீதி யாகும் ஆயின், சாதிக்கும்-சிரவண ஆதி சாதநங் களால்) சித்திக்கச் செய்கின்ற. முத்தி-மோக்ஷம், எவர் தமக்கு-(அந்தக் கரணம், ஆத்மா என்னும் இரண்டில்) யாவர்க்கு, அதனை-அவ் விஷயத்தினை, சாற்றும்-(அடியேனுக்கு) அருளிச்செய்யும், என- என்று (அர்ஜுநன்) வினவ. (எ-று) தம் அசை. 74

பந்தமுத்தி தானும்அந்தப் பரந்தபுத்தி தனக்கே
யாம், அந்தவிம்பம் தனக்கிலைஎன் றறிவுவரச் 75
சொன்னவரோ.

(ந-ரை.) பந்தம்-(அஞ்ஞாநத்) தளையும், முத்தி உம்-மோக்ஷமும், அந்த-முன்னர்க் கூறிய, பரந்த-



(விஷயங்க்ளில் வியாபித்து) விரிந்த, புத்தி தனக்கே ஆம்-(ஆபாச சகித) அந்தக் கரணத்திற்கே யாகும், அந்த-முன்னர்க் கூறிய, விம்பம் தனக்கு-விம்ப ரூப ஆத்மாவிற்கு, இலை-(அப் பந்த மோக்ஷங் கள்) இல்லை என்று-என்ப தாக, அறிவு வர-விவேகம் உண்டாம் வண்ணம், சொன்னவரோ-கூறி யருளிய பகவானோ (நீர்). (எ-று)
தான் தன் தன் அசை. 75

பரம்ஏகம் ஆயும்அதில் பலசீவர் ஏதெனவே,
ஒருகடலில் பலகுமிழி உதிப்பதுபோல் என்ற 76
வரோ.

(ந-ரை.) பரம்-பிரஹ்மசேதநம், ஏகம் ஆயும் அத்விதீயமா யிருந்தும், அதில்-அந்தப் பிரஹ்ம சேதநத்தின்கண், பல-நாநா, சீவர்-சீவ சேதநங் கள், ஏது-(தோற்றுவதற்குக் காரணம்) யாது, என-என்று அர்ஜுநன் வினவ, [விடை அருளிச் செய்கின்றார்,] ஒரு-ஏகமா யிருக்கின்ற, கடலில்-சமுத்திரத்தில், பல-நாநா, குமிழி-புத்புதங்கள், உதிப்பது-(வாயுவின் தொழிலால்) உண்டாதல். போல்-போல, என்றவரோ-(ஒரே பிரஹ்ம சேத

நத்தில், அவித்தை காம கர்மாதிகளால் பல சீவர் தோன்றுதல் ஆம்) என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று)

இதனை, சமுத்திர (கடல்) புத்புத (குமிழி) நியாயம்(திருஷ்டாந்தம்) என்பர் ஒன்றில் உபாதி வசத்தால் அநேகப் பிரதீதி. கடலில்குமிழி புத்புதாதிகள் போல், உண்டாகலாம். ஏகத் தன்மைக்கு விரோதம் உண்டாவதில்லை என்பதாம். 76

சீவனது தான்என்றும் சேருப்பிரமம்என்றும், ஆவதுவோ பேர்இன்பம் ஆங்கதெனக் கோதும் என 77

(ந-ரை.) தான்-தனது ஸ்வரூபம், சீவன்-சீவசொரூபம், என்றும்-எனவும்,சேரும் அது-(தான் ஒழிபட்டு) அடையத் தகுந்தது, பிரமம்-பிரஹ்ம சொரூபம், என்றும் - எனவும், ஆவதுவோ-(உள்ள ஆண்டான் அடிமைப் பேத ஞானத்தினால்) ஜநிப்பதோ, பேர் இன்பம்-பிரஹ்ம ஆநந்தம், அது-அதனை, எனக்கு- அடியேனுக்கு, ஓதும்-கூறியருளும், என-என்று அர்ஜுனன் வினவ. (எ-று)



ஆண்டான் அடிமைத் திறமா மோக்ஷம் என்பது கேள்வி யாம். 77

ஏகம்பி ரமம்இ ரண்டிலைநீ வேறும்அல, சோகம்உறும் பேதம்அறில் தோன்றும்இன்பம் என்றவரோ. 78

(ந-ரை,) பிரமம்-பிரஹ்மம், ஏகம்-ஒன்றே (உளது), இரண்டு-துவைதம் (இரண்டாவது) வஸ்து, இலை-இல்லை, நீ உம்-நீயும். வேறு அல-(அந்தப் பிரஹ்மத்துக்கு) அந்நியம் அல்ல,சோகம்-துக்கம், உறும் - (வந்து) பொருந்து (தற்கேதுவாகிய), பேதம்-பேத புத்தி, அறில்-நீங்கி விட்டால், இன்பம்-(பிரஹ்ம) ஆநந்தம், தோன்றும்-உண்டாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று) 78

சீவபே தம்போமோ சித்தோன்றமோஎனவே, ஆவல்மநம் அறும்சுழுத்தி அவத்தையில்பார் என்றவரோ. 79

(ந-ரை.) சீவ-சீவர்களது, பேதம்-வேற்றுமை, போமோ-நீங்குமோ, சித்து ஒன்று ஆமோ-(அங்ஙன் பேதம் ஒழிந்து) சேதநம் ஏக மாக விளங்

குமோ?, என-என்று அர்ஜுனன் வினவ, [விடை யருளிச் செய்கின்றார்] ஆவல்-(விஷய) ஆசையினை யுடைய, மநம்-அந்தக்கரணம், அறும்-ஒழியும் (அல்லது, உபாயம் உறும்), சுழுத்தி அவத்தை யில் - சுழுத்தி அவஸ்தையின்கண், பார் - (அப் பேதம் ஒழிந்து சேதநம் ஏகம் ஆக விளங்குவதை) உணர்வா யாக,) என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று)

நித்திராவஸ்தை யாகிய சுழுப்தி அவஸ்தையில், பேதம் இன்றி யிருத்தலை திருட்டாந்தம் கூறி அபேதம் காட்டிய தாகும். 79

பேதம்அல இவ்உலகம் பிரமமயம் என்றறிந்
தும், பூதமயம் ஆய்த்தோற்றல் போகாத
தேதேனவே. 80

(ந-ரை.) இவ் உலகம்-(பிரத்தியக்ஷ மாகத் தோற்றுகின்ற) இப் பிரபஞ்சம், பேதம் அல-(பிரஹ்மத்தினுக்கு) அந்நியம் அன்று, பிரம மயம்-பிரஹ்ம சொரூபமே, என்று-என, அறிந்தும்-உணர்ந்தும், பூத மயம் ஆய்-பஞ்ச பூத ஸ்வரூபம் ஆக, தோற்றல் - பிரதீதியாதல், போகாதது-



நிவிர்த்தியாகாதது, ஏது-யாது காரணம், என-என்று அர்ஜுனன் கேட்க. (எ-று)

காரிய காரண அபேத ஞானம் வந்தும், காரிய ரூப மாகத் தோற்றல் கூடாது எனச் சங்கித்த தாம். 80

கானலைநீர் என்றேடிக் கண்டவர்க்குத் தீர்ந்த
பின்னும், வான்உலவு நீர்ஆகி வயங்குதல்போல்
என்றவரோ. 81

(ந-ரை) கானலை-(ஊஷர பூமியில் தோற்றும்) உஷ்ண கிரணத்தினை, நீர்-(உண்மை ஆன)ஜலம், என்று-எனக் கருதி, ஓடி-சென்று, கண்டவர்க்கு-(இது கானலே, நீர் அன்று என ஐய விபரீதங்க ளின்றிப் பிரத்தியக்ஷ மாக) உணர்ந்தவர்க்கு, தீர்ந்த-(அங்ஙன் ஜலப் பிராந்தி) நீங்கிய, பின் னும்-பின்னரும், வான்-வெளியில், உலவு-செல்லு கின்ற, நீர் ஆகி-ஆற்றுச்) சலம் ஆய், வயங்குதல்-விளங்குதல், போல்-போல, என்றவரோ-(இவ் வுலகம் பிரஹ்ம மயம் என் றறிந்த பின்னரும், பூத மய மாய்த் தோற்றும்) எனக்கூறி யருளிய பகவானே (நீர்). (எ-று)

இதனை, மரு (பாலை வனம்) மரீசிகா (சூரிய கிரணம்) நியாயம் என்றும்- மிருக (மான்) திருஷ்ணிகா (ஜலம்-கனல்) நியாயம் (திருஷ்டாந்தம்) என்றும் கூறுவர். சோபாதிகப் பிராந்திகள், அதிஷ்டான ஞானம் வந்த பின்னரும், உபாதி யிருக்கும் வரை தோற்றும். நிமித்த காரணம் கெட்டால், நிவிர்த்தி யாம் என உணர்க. 81

அறிவானும் நல்அறிவும் அறியப்ப டும்பொரு
ளும், பிறிவாய்மூன் றஇருத்தல் பேதம்அல வோ
எனவே. 82

(ந-ரை.) அறிவானும்-ஞாதாவும், நல்(விஷய ஆவரணத்தை நீக்கும்) சிறந்த, அறிவும்-ஞானமும், அறியப்படும் பொருளும்-(ஞான விஷயம் ஆய) ஞேயமும் (என), மூன்று ஆய்-மூன்று வித மாக, பிறிவு ஆய்-வேறு (பாடுற்ற திரி படி)ஆய், இருத்தல்-தங்கல், பேதம் - த்வைதம், அலவோ-அன்றோ? என-என்று அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இடத்தில் திரு அடியில் வணங்கி கேட்க. (எ-று). 82



சொப்பநத்தில் தனித்தொருவன் தோற்றம்வே
றில்லைஅங்கே, கற்பனைஆம் பொருள்அறிவு காண்
பவன்போல் என்றவரோ. 83

(ந-ரை.) தனித்த-தனியன்ஆய் (நித்திரைசெய்கின்ற), ஒருவன்-ஒரு புருஷனது, சொப்பநத்தில் ஸ்வப்ந அவஸ்தையில், வேறு-(அவனுக்கு) அந்நியம் ஆக, தோற்றம்-பிரதீதி யாகும் திரிபுடிப் பொருள், இல்லை (உண்மை யாக) இன்றும், அங்கு-(அங்ஙன மாயினும்) அவ்விடத்து, பொருள்-ஞேயம், அறிவு-ஞானம், காண்பவன்-ஞாதா (என்னும் திரி புடி), கற்பனை ஆம்-பொய் யாகத் (தோற்றுவ தாம்), போல-(அது) போன்று, என்றவரோ-(சாக்ஷிக் கந்நிய மாகத் தோன்றும் ஞாதிரு, ஞான, ஞேயம் என்னும் பேத திரி புடித் தோற்றம் கற்பனை யாம், உண்மை அன்று) என அநுக்கிரகித்த பகவானே (நீர்). (எ-று) 83

கற்பனைஆம் பேதங்கள் காணமல் போம்
வகையை, விற்பனமாம் நான்அறிய விளம்புமென
வேவணங்க. 84

(ந-ரை ) கற்பனை ஆம்-பொய் ஆகிய, பேதங்கள்-(ஞாதா-ஞான ஞேய) வேறுபாடுகள், காணமல்-

தோன்றுமல், போம்-நீங்கும், வகையை-தன்மை யினை, நான்-அடியேன், விற்பநம் ஆ(க)-தெளி வாக, அறிய-உணர்ந்து கொள்ள, விளம்பும்-கூறி யருளும், என-என்று விண்ணப்பித்து, வணங்க-(அர்ஜுநன்) நமஸ்காரம் செய்ய. (எ-று) 84

துரியம்ஆம் யோகத்தால் தூயமநம் லயம் ஆனல், அரியமு வகைவிகற்பம் அழியும்என்று சொன்னவரோ. 85

(ந-ரை.) துரியம் ஆம்-நான் காம் பூமி யாகிய யோகத்தால்-(ஞாந) நிஷ்டை (யின் முதிர்ச்சி) யால், அதாவது, அத்வைத பாவநா ரூப நிர்விகற்ப சமாதி அப்பியாசத்தால்) தூய-பரிசுத்த, மநம்-(பிரஹ்மாகார மான) மநோ விருத்தி, லயம் ஆனல்-(பிரஹ்ம ஸ்வரூப மாக) அடங்கும் ஆயின், (அதாவது, அத்வைத அவஸ்தாந ரூப நிர்விகற்ப சமாதி நிலை வரு மாயின்), அரிய-(நீங்குதற்கு) அருமை ஆன, மு வகை-மூன்று விதம் ஆன, விகற்பம்-(ஞாதா ஞாந ஞேய) பேதம், அழியும்-நாச மாம், என்று-என, சொன்னவரோ-கூறி யருளிய பகவானே (நீர்). (எ-று) 85



சிறந்திருக்கும் ஆந்மாவும் செகம்எல்லாம் நிறைந்திருந்தும், மறைந்தெனக்குத் தோன்றுத வகைஏது சொல்லும்என. 86

(ந-ரை.) சிறந்து-(சச்சிதாநந்தம் ஆகிய) சிறப்பியல்பு பொருந்தி, இருக்கும்-இருக்கின்ற, ஆந்மா-ஆத்மா, செகம்-பிரபஞ்சம், எல்லாம்-முழுவதும், நிறைந்து இருந்தும் பூரண மாய் இருந்தும், எனக்கு - அடியேனுக்கு, மறைந்து - ஒளிந்து, தோன்றுத - விளங்காத (புலப்படாத) வகை-விதம், ஏது-என்னே?, சொல்லும் - கூறியருளும், என - என்று (அர்ஜுநன்) கேட்க. (எ-று) 86

ஆன்மாவும், என்னும் உம்மை எச்சப்பொருட்டு.

சத்துச்சித்தா நந்தம்தாம் மூன்றும்அ தனுடனே, ஒத்துற்று நாமவு ருவஞ்ச கம்ஆகி, 87

(ந-ரை.) சத்து-இருப்பும், சித்து-விளக்கமும், ஆநந்தம்-பிரியமும். மூன்றும்-(ஆகிய) மூன்றும் (ஆத்ம சொரூப மாம்), அதன் உடன்)-அந்த மூன்றோடு, நாமம்-(அநாத்ம ஜகத் சொரூப மாய) பெயர், உருவம்-வடிவம் (என்னும் இரண்டும்), ஒத்து

உற்று-ஒருமித்துப் பொருந்தி, சகம் ஆகி-பிரபஞ்சம் ஆய் (எ-று) தாம் அசை. 87

இருக்கையினில் தோன்றதி வைமூன்றும் பிரமம்
என, மரிக்கில்வரும் பின்இரண்டு மறிசகம்என்
றுரைத்தவரோ, 88

(ந-ரை) இருக்கையினில்-(கலந்து)இருக்கின்றபடியால். தோன்றாது - (அப் பாகுபாட்டுணர்வின்றிய உனக்கு ஆத்ம:) விளங்காது, [பின் எக்கால் விளங்கும் எனில் கூறுகின்றார்.] இவை மூன்றும் - சச்சிதாநந்தம் ஆகிய இம் மூன்றும், பிரமம்-(பிரத்திய கபிந்ந) பிரஹ்ம ஸ்வரூபம், என-என்றும், பின் - பின்னர் (க் கூறப்பட்ட). இரண்டும்-(நாம ரூபங்கள்) இரண்டும், மறி-நாசம் ஆகின்ற, சகம்-பிரபஞ்ச (ஸ்வரூபம்), என்று-எனவும், மரிக்கில் - (பாகுபடுத்தி விசார ரூப ஆலோசனை செய்து பார்க்கில்,வரும்-(சச்சிதாநந்த ஸ்வரூப ஆத்மா)தோற்றும்,என்று-என,உரைத்தவரோ-கூறி யருளிய பகவானே (நீர்).(எ-று) 88

அறிந்துகொள்ஞா நத்தாலே ஆந்மாவை என்
றுரைத்தீர், சிறந்தொளிரும் ஆந்மாவும் திருசியமா
மோஎனவே. 89



(ந-ரை,) ஞாநத்தால் - (அபரோக்ஷ) ஞாநத்தினால், ஆந்மாவை-ஆத்மாவினை, அறிந்து கொள்-உணர்ந்துகொள்வாயாக, என்று-என,உரைத்தீர்-(முன்னர்) கூறி யருளினீர், சிறந்து-(சச்சிதாநந்தமாகிய) சிறப் புற்று, ஒளிரும் - பிரகாசிக்கின்ற, ஆத்மாவும்-ஆத்மாவும், திருசியம் ஆமோ-(அங்ஙன் அறியப்படத் தக்க சகத் போலத்) திருசியம் ஆகுமோ, என-என்று (அர்ஜுநன்) வினவ. (எ-று)

ஆன்மாவும், என்பதில், உள்ள உம்மை எச்சப் பொருட்டு. 89

முந்தியஞா நத்தாலே முதிரும்அந்ஞா நம்துரக்
கில். சிந்தையில்ஆந் மாச்சுயம்ஆய்த் திகழும்
என்று சொன்னவரோ. 90

(ந-ரை.) முந்திய-(முதன்மை வாய்ந்த, அல்லது) சிறந்த, ஞாநத்தால்-ஞாநத்தினால், முதிரும்-மிகுந்த (கடின) அஞ்ஞாநம் - அஞ்ஞாநத்தினை, துரக்கில்-(நீ) நிவிர்த்திக்கில்,சிந்தையில்-(உனது) சித்தத்தின்கண், ஆந்மா-ஆத்மா,சுயம் ஆய்-தானாகவே, திகழும்,(உனது ஸ்வரூப மாக)விளங்கும், என்று-என, சொன்னவரோ-கூறி யருளிய பகவானே (நீர்). (எ-று) 90

இனிய முத்திச் சுகம்இருப்ப தெப்படிஎன் றே வினவ, அநுபவத்தில் அறிவிடயா நந்தம்போல் என்றவரோ. 91

(ந-ரை.) இனிய-(யாவராலும்) விரும்பத் தக்க, முத்தி சுகம் - மோக்ஷாநந்தம் எப்படி-எவ் வாறு, இருப்பது - இருக்கும், என்று - என, வினவ-(அர்ஜுநன்) கேட்க, [அகற்கு விடை அருளிச் செய்கின்றர்) விடய ஆநந்தம்-விஷய சுகத்தினை, போல்-(அநுபவித்து அறிவது) போல, அநுபவத்தில்-நேரே துய்த்தறியும்) அநுபவ ஞானத்தினல், அறி - (ஆத்மாநந்தத்தினை) உணர்ந்து கொள்வாயாக, என்றவரோ-எனக் கூறியருளிய பகவானே (நீர்) (எ-று) 91

மநலயம்வந் தவர்அலது மற்றிலரோ முத்தர் எனச், சநகனைபோல் சீவந்முத்தர் தாமும்உளர் என்றவரோ. 92

(ந-ரை.) மந- (சமாதியினுல்) மநோ விருத்தியின், லயம்- அடக்கம், வந்தவர்-கைவரப் பெற்றவர்களே, அலது - அல்லாமல், முத்தர்-மோக்ஷம் அடைந்தவர்கள். மற்று இலரோ - (மநோ லயம்



வாாத) வேறு பேர்கள் இல்லையோ, என-என்று (அர்ஜுநன் வினவ) [விடை யருளிச் செய்கின்றர்.] சநகனே-சநக (மஹாராஜ வி)னை, போல்-போல, சீவந் முத்தர் உம்-(மநோ லயம் அடையாத வியுத்தாந தசையில் வியாவகாரியா யிருக்கும்) ஜீவந் முக்தர்களும். உளர்-இருக்கின்றனர், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று) தாம் அசை. 92

சீவந்முத்தி அடைந்தோர்க்கள் செயலும்அவர் தம்குணமும் நாஉரைக்கும் வாசகமும் நான் அறியச் சொல்லும்என. 93

(ந-ரை.) சீவந் முத்தி - ஜீவந் முக்தியினை, அடைந்தோர்கள் — அடைந்தவர்களினது, செயலும்-வியவகாரமும் (தொழிலும), அவர்-அவர்களினது, குணமும்-பண்பும், நா-(அவர்களது) நாவானது (அல்லது, வாக் கிந்திரிய மானது), உரைக்கும் - சொல்லுகின்ற, வாசகமும் - வசநப்பிரகாரமும, நான - அடியேன், அறிய-உணர்ந்து கொள்ளும்படி, சொல்லும்-கூறி அருளும், என-என்று (அர்ஜுநன் வினவ).(எ-று) தம் அசை. 93

"எவ் வாறு, செல்வான், பேசுவான், நடப்பான்" என பகவற்கீதை, 2வது அத்தியாயம், 54வது சுலோகம். தமிழ்க் கவி 48, அர்ச்சுநன் விளுவாம்,

வரும்கருவு பிறப்பினேடு வளர்தல்பருத் தல் குறைதல், ஒருங்கலும்மெய்க் கென்றதனை ஒறுத் திருப்பார் என்றவரோ. 94

(ந-ரை.) வரும்-(கர்ம வசத்தால்) வரக்கூடிய, கருவு-(மாதாவின்) கர்ப்பத்தி னின்றும், பிறப்பு-ஜநித்தலும், இருத்தல் - உள ஆகலும் (அல்லது, நிலைத்தலும்,) வளர்தல் (உம்)-விருத்தி ஆகலும், பருத்தல்(உம்)-தூலம் ஆதலும் (பெரி தாதலும்), குறைதல்(உம்)-சுருங்குதலும்(தேய்தல், அல்லது, சிறுத்தலும்), ஒருங்கலும் - நாசம் அடைதலும் (ஆகிய (ஷட் பாவ) ஆறு இருப்பு விகாரமும்), மெய்க்கு - (தூல) சரீரத்திற்கு, என்று - என(க் கருதி), அதனை - அச் சட் பாவ விகாரங்களை, ஒறுத்து இருப்பார் - (ஜீவன் முத்தர்கள் தமக்கு இல்லை எனக் கடிந்து, அல்லது நீக்கி இருப்பர், என்றவரோ-என அநுக்கிரகஞ் செய்த பகவானே (நீர்). (எ-று)



தமிழ் பகவற் கீதை, 2வது அத்தியாயம் 23வது கவியின் கருத் தாம். 94

பார்ப்பதுவும் கேட்பதுவும் பகர்வதுவும் செல்வதுவும், ஏற்பதுவும் காணதன்மம் எனத் துணிவார் என்றவரோ. 95

(ந-ரை.) பார்ப்பதவும் - (சக்ஷு இந்திரியத்தினல், ரூபத்தினைக்) காண்டலும், கேட்பதுவும்-(சுரோத்திரேந்திரியத்தினல், சப்தத்தினைக்)கேட்டலும், பகர்வதுவும் - (வாக் இந்திரியத்தினல், நாமத்தினைக்)கூறுவதுவும், செல்வதுவும்-(பாதேந்திரியத்தினல்) நடத்தலும், ஏற்பதுவும்-(பாணீந்திரியத்தினல்) வாங்குதலும் ஆகிய யாவும்), கரண - ஞானேந்திரிய கர்மேந்திரியங்களின், தன்மம் - தருமங்கள், என-என்று, துணிவார்-(ஜீவன் முத்தர்) நிச்சயம் செய்வார். என்றவரோ-அருளிச் செய்த பகவானே (நீர்) எ-று) 95

இது வசநப் பிரகாரம் தமிழ் பகவற் கீதை, 3வது அத்தியாயம் 15வது, கவியின் கருத் தாம்,

பசிதாகம் உயிர்க்கெனவே பயம்துக்கம் சுகம் காமம், வசிகோபம் மதிக்கெனவே மகிழ்ந்திருப் பார் என்றவரோ. 96

(ந-ரை.) பசி - பசியும் (உதராக்கினி சாந்திக்கான உணவு வேட்கையும்), தாகம்-தாகமும்,(நீர் வேட்கையும), உயிர்க்கே-பிராணனுக்கே (தமக் இல்லை) என-என்றும், பயம்-அச்சமும், துக்கம்-துன்பமும், சுகம்-இன்பமும், காமம்-ஆசையும், வசி-குற்றம் (பொருந்திய), கோபம்- சினமும், மதிக்கே - அந்தக் கரணத்திற்கே (தமக் இல்லை), என-என்றும் (கருதி,) மகிழ்ந்து-சந்தோஷித்து, இருப்பார்,(ஜீவந்முத்தர்) இருப்பார்,என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீ). (எ-று) 96

இது குணம் உரைத்தல், எ ஏ ஈற் றசைகள்.

வீடும்தா ரமும்உறவு மேவிஎன்றும் இருந்தாலும், நீடும்தா மரையிலைநீர் நிகர்ஆவார் என்றவரோ. 97

(ந-ரை.) வீடும்-மனையையும், தாரம் உம் - மனைவியையும், உறவும் - சுற்றத்தாரையும், என்றும்-சதா காலமும் (எப்போதும்), மேவி-(ஜீவந் முத்தர்கள்) பொருந்தி,இருந்தா லும்-இருந்தபோதிலும, நீடும்-விரிந்த, தாமரை இலை-தாமரையிலையிலுள்ள, நீர்-ஜலம், நிகர்(அதனிடத்தி லிருந்தும்,



அதனில் பற்றுறு திருத்தல்) போல், ஆவார்-(அவற்றில் பற்றறு திருப்பவர்) ஆவர், என்ற வரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்) (எ-று)

இதனை, கமல பத்ர (தாமரை இலை) உதக(நீர்) நியாயம் (திருஷ்டாந்தம்) என்பர். இது, செயல் உரைத்தல். 97

பற்றிடும்கா யமும்தானும் பன்னாள்ஒன் றுயினும் பின், உற்றபுளி யம்பழமும் ஓடும்ஒப்பார் என்றவரோ. 98

(ந-ரை.) பற்றிடும்-(கர்மாதீன மாகப்)பொருந்தும், காயமும்-சரீரமும், தானும்-(ஆத்மா வாகிய) தாமும், பல் நாள்-பல காலம், (அதாவது, அஞ்ஞான காலத்தில், அது, பிறந்தது முதல் ஞானம் வரும் வரை),ஒன்றுயினும்-ஐக்கியமா யிருப்பினும் (அதாவது, பிரிவுபடுத்த முடியாமல் ஏக மாகப் பிராந்திஜ தாதாந்மியத்தால், இயைந்து விளங்கினும்), பின்-(ஞானம் வந்த) பின்னர், உற்ற-பிஞ்சிலை பிரிவுபடாமல் ஐக்கிய முற் றிருந்து, பின் முதிர்தலைப்) பொருந்திய (கனிவு பொருந்திய),

புளியம் பழமும்-புளியம் பழமும், ஓடும்-(அதன்) தோலும், ஒப்பார்-(முன் னுள்ள இயைபு நீங்கி வேறுபட்டு விளங்குதல்)போல (அஞ்ஞாந காலத் திய பிராந்திஜ தாதாந்மிய சம்பந்தம் நீங்கித் தேகத்தினுக்கு வேறுபட்டு) விளங்குவார் (ஜீவந் முத்தர்), என்றவரோ- என அருளிச் செய்த பக வானே (நீர்) (எ-று) 98

இது செயல் உரைத்தல்,

கூறும்உல கியற்கையுடன் கூடினும்மெய்ஞ் ஞாநம்வந்தோர், சேறும்பிள்ளைப் பூச்சியும்போல் 99
திரிவார்காண் என்றவரோ.

(ந-ரை) கூறும்-(அசுத்தம், துக்கம், அநித்தம் என்று) சொல்லாநின்ற, உலக இயற்கை உடன்- பிரபஞ்ச ஸ்பாவத்தோடு, கூடினும்-பொருந்தி யிருப்பினும், மெய் ஞாநம் - (திட அபரோக்ஷ) தத்வ ஞாநம், வந்தோர்-கைவரப் பெற்ற பெரி யோர்,சேறும்-(சம்பந்தித்தவற்றிற் படியக்கூடிய) அளறையும், பிள்ளைப் பூச்சியும்-(அதன்கண் அவ் வளறு படியாமற் சஞ்சரித்தல் செய்யும்)பிள்ளைப் பூச்சியினையும், போல்-போல, திரிவார்-(இவ் வுல



கின்கண் இவ் வுலக இயற்கையோடு பற் றின் றிச்) சஞ்சரிப்பர் (சீவந் முத்தர்), என்றவரோ- என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று) 99

இதனை, பங்க (சேறு) கீடக (பிள்ளைப் பூச்சி- புழு) நியாயம் என்பர். இது செயல் உரைத்தல்.

ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரில் கிடப்பதுபோல், மதியோடு கூடினும்பின் மயங் கார்காண் என்றவரோ. 100

(ந-ரை.) ததி ஊடு - (அபேத மாகக் கலந்து கிடந்த) தயிரினிடத்து, கடைந்த-மதநம் செய்து எடுக்கப்பட்ட, வெண்ணெய்-நவநீதம், மோரில்- மோரினிடத்து (அதாவது, கடையப்பட்ட அத் தயிரினிடத்து), கிடப்பது-(பின்னர்ச் சேர்க்கப் படினும் அதனோடு கலவாது, அதன்கண் வேறு பட்டுக்) கிடத்தல், போல்-போல, பின்-(ஞாநம் வந்த) பின்னர், மதியோடு - (ஞாநிகள்) அந்தக் கரண விவகாரத்தோடு, கூடினும் - சேரினும், மயங்கார்-(பிராந்திஜ தாதாந்மிய மாகிய) மயக்கத் தினை அடையமாட்டார்கள், என்றவரோ-என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று)

தான்-அசை. இதனை, தக்ர (மோர்) நவநீத (வெண் ணெய்) நியாயம்(உதாரணம்) என்பர்-100

அருச்சுநன்தன் பொருட்டாக அனைவருக்கும் ஞானம்வரப், பொருந்தியதேசிகவடிவாம் புண்ணி யரே கண்வளரீர். 101

(ந-ரை.) அருச்சுநன் -அர்ஜுனனது. பொருட்டு ஆக-நிமித்தம் ஆக, அனைவருக்கும்-சகல ஜிஞ்ஞாசு களுக்கும், ஞானம் வர-ஞானம் வரும்படி, பொருந் திய-உபதேசிப்பான் அமைந்த,தேசிக வடிவு ஆம்-ஆசார்ய ஸ்வரூபம் ஆகிய, புண்ணியரே-புண்ணிய ஸ்வரூபரே, கண்வளரீர்-(நீர்) நித்திரை செய்தருள் வீர். (எ-று).

கண் வளர்தல், விருத்தியாதல், நித்திரை செய் தல் பொருளாம். 101

ஆயர்குல மாதர் அளவிலோ ரைப்புணர்ந்தும், தூயபதின் ஆறயிரவருடன் தோய்ந்திருந்தும்.102

(ந-ரை,)ஆயர்-இடையர்,குலம்-குலத்திலுள்ள, மாதர் அளவிலோரை-எண் இறந்த ஸ்திரீகளை, புணர்ந்தும்- சேர்ந்தும், தூய -பரிசுத்த மான, பதின் ஆருயிரவர் உடன்-பதின் ஆருயிரம் தேவ



ஸ்திரீகளோடு, தோய்ந் திருந்தும்-பொருந்தியிருந் தும். (எ-று) இது-குளகம். 102

பரமமு நிவர்முன்னே பரிச்சித்தைத் தீண்டி அன்று பிரமசரி யம்செலுத்தும் பேர்ஒளியே கண்வளரீர். 103

(ந-ரை.)பரம-மேலான, முநிவர்-ஞாநிகள்,முன்-சந்நிதியில், பரிச்சித்தை - பரிச்சித்து மஹா ராஜா வை. தீண்டி-(கையால்) ஸ்பரிசித்து, அன்று - அக்கால், பிரமசரியம்-(நான் நித்திய பிரஹ்மசாரி என்று)பிரஹ்மச்சரிய ஆசிரமத்தினை, செலுத்தும்-நடாத்திய, பேர் ஒளியே - பூரணப் பிரகாசரே, கண்வளரீர்-(நீர்) நித்திரை செய்தருள்வீர், (எ-று) ஏ அசை, 103

ஆதிமூ லம்விசயற் காதிமறை யின்பொருளை, ஓதியு ணர்த்துப்இந்த உண்மைதனைக் - காதல் உற்றுக், கற்றோரும் கேட்டோரும் காசினியில் வாழ்ந்துமுத்தி, பெற்றோர்கள் முத்தர்பெறும் பேறு.

(ந-ரை.) ஆதி மூலம் - ஆதி காரண னாகிய பகவான், விசயற்கு-அர்ஜுனனுக்கு, ஆதி-முதன் மை யான, மறையின்-வேதத்தின், பொருளை-

அர்த்தத்தினை, ஓதி-உபதேசித்து, உணர்த்தும்-அறிவிக்கும், இந்த உண்மைதனை-இவ் உண்மை யாகிய கீதா சாரத்தினை, காதல்-விருப்பம்-உற்று-பொருந்தி, கற்றோரும்-படித்தவரும், கேட்டோரும் -(ஆசாரியரிடம்) சிரவணஞ் செய்தவரும், காசினியில்-இவ் உலகத்தில், வாழ்ந்து-(அநேக காலம் புத்திர பௌத்திர சம்பத்தோடு சுக மாக) வாழ்ந்து, முத்தர்-ஞானிகள், பெறும்-அடைகின்ற, பேறு-பிரயோசக மாகிய, முத்தி-மோக்ஷத்தினை, பெற்றோர்கள்-அடைந்தவர்களே ஆவர், (எ-று)

ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்யய,

கீதா சாரத் தாலாட்டு, நக்ஷத்திர விளக்க (மின் ஒளி) உரை முற்றுப் பெற்றது.

சர்வதாரி ஞு மாசி மீ 1947.



உரை நூல்.

| | | |
|---|---|---|
| 14 | நாநா ஜீவ வாதக் கட்டளை, சத்தியார்த்தப் பிரகாசிகை உரை | 2 00 |
| 15 | கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை | 2 00 |
| 16 | மேற்படி, நக்ஷத்திர விளக்க உரை | 0 50 |
| 17 | சசி வர்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை | 2 00 |
| 18 | மகா ராஜத் துறவு-மநப் பிரசாதிநி உரை | 2 00 |
| 19 | பக்தி (வைராக்ய) சதகப் பத உரை பொழிப் புரை | 1 50 |
| 20 | மேற்படி, உரை, உதாரணக் கவி, பக்தி ரச உரை | 1 00 |
| 21 | வைராக்ய தீபம், பத உரை பொழிப்புரை | 0 50 |
| 22 | மேற்படி, உரை, உதாரணக் கவி, சுடர் உரை | 1 00 |
| 23 | சிடாசாரம், பால போதிநி உரை | 0 50 |
| 24 | கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீபிகை உரை உதாரணக் கவி 233-க்கு, ஆதித்தன் உரை | 2 50 |
| 25 | ஈசுவர கீதை, ரஹஸ்யார்த்த விளக்க உரை | 2 50 |
| 26 | வேதாந்த சூடாமணி, சந்தோஷ தாயிநி உரை | 5 00 |
| 27 | கைவல்ய நவநீதம், பத சார உரை | 3 50 |
| 28 | கைவல்ய நவ நீதம், கிருத பாந உரை | 3 00 |
| 29 | கைவல்ய நவநீத ஆராய்ச்சி | 0 50 |